25% Off

CHANDAMAMA'S

# Ramayana

*An Epic Journey*






Follow the epic journey of Prince Rama, from his birth to his exile, from the abduction of his wife, Sita, to his great war with the Asura King, Ravana, in Chandamama's latest offering: Ramayana - An Epic Journey.

MON 9/1/18

**Order now and get 25% off!**

To place an order go to www.chandamama.com and click on the Pre-order button.

Chandamama's Ramayana is available only in English at all leading book shops.

அம்புலிமாமா மதிமுகம் : 62 ஜனவரி : 2009 புன்னகை : 1

## சிறப்புப் படைப்பாக





நவீன வேதாளக் கதை...19

ஸ்விட்சர்லாந்து தேசத்து நாட்டுப்புறக் கதை...44





இந்திய வரலாற்றின் சுவையான நிகழ்ச்சிகள்-16 ...48

இராமாயணம் (யுத்த காண்டம்-1)...57

## பொருளடக்கம்







## அமர வாக்கு

உழைப்பாளி சுமையைப் பொருட்படுத்த மாட்டான். விடா முயற்சியுடையவன் தன் இலட்சியம் எங்கிருந்தாலும் அதைச் சென்று அடைவான். கலைஞனுக்குத் தன் திறமையை அயல்நாட்டிலும் வெளிக்காட்ட முடியும். அதுபோல் இன்சொல் பேசுபவன் எந்தப் பகைவனையும் வெற்றிக் கொள்வான்.

★ ★ ★

ஒருவனுடைய சுபாவத்தைக் கொண்டு அவன் நல்லவனா, கெட்டவனா என்று உலகம் மதிப்பிடுவது இல்லை. அவனுடைய செயல்களைக் கொண்டே அவனை மதிப்பிடுகிறது.



# விழித்தெழ வேண்டிய தருணம் இது!

"விழித்தெழு! உன் இலட்சியத்தை அடையும் வரை ஓயாதே!" என்று சுவாமி விவேகானந்தர் 1883ஆம் ஆண்டில் சிகாகோவில் நடந்த அகில உலக மத சார்பான மாநாட்டில் கூறியது, அன்று மட்டுமன்றி இன்றுவரை என்றுமே கடைப்பிடிக்க வேண்டிய மகத்தான கொள்கை! ஆனால், அவர் கூறியதன் உட்கருத்தினை இன்று சிலர் தவறாகப் புரிந்து கொண்டிருப்பது வருந்தத் தக்கது. சாதி, மத பேதங்களைக் கடந்து உலகிலுள்ள அனைவரும் நல்லிணக்கத்தோடு ஒருங்கிணைந்து வாழ்வதையே வாழ்வின் உன்னத லட்சியமாகக் கடைப்பிடிக்குமாறு விவேகானந்தர் கூறினார். இந்தியாவில் வெவ்வேறு மக்கள் கடைப்பிடிக்கும் வெவ்வேறு மதங்களும் இதைத்தான் கூறுகின்றன.

ஆனால், சமீபத்தில் இந்திய மாநகரம் ஒன்றில் நடந்த வன்முறை சம்பவங்கள் இந்நாட்டின் பெருமைக்குக் களங்கம் விளைவிக்கும் வகையில் நடந்துள்ளன. வழிதவறிப் போன சில இளைஞர்கள் தவறான லட்சியத்தைப் பின் தொடர்ந்து, வன்முறை சம்பவங்களில் இறங்கி, ஒரு பாவமும் அறியாத பொதுமக்களை ஈவிரக்கமின்றி கொன்று குவித்தது மிகவும் அதிர்ச்சியைத் தரக்கூடிய விஷயம்! அதுவும் விவேகானந்தரின் பிறந்த நாளான ஜனவரி 12ஆம் தேதி இளைஞர்கள் தினமாகக் கொண்டாட இருக்கையில், பாதை தவறிய சில இளைஞர்கள் மக்களின் உயிரைக் குடித்தது வேதனைத் தரக்கூடிய விஷயம்!

2008ஆம் ஆண்டில் இந்தியா ஒலிம்பிக், செஸ் ஆகிய போட்டிகளில் மகத்தான சாதனைகளை நிகழ்த்தி இந்தியர்களைக் குதூகலத்தில் ஆழ்த்திய போது, மேற்கூறிய நிகழ்ச்சி ஒரு குடம் பாலில் துளி விஷம் கலந்தது போல், அத்தனை மகிழ்ச்சியையும் குலைத்து விட்டது. நிலவுக்கே செயற்கைக் கோள் அனுப்பி இந்தியர்கள் பெருமையுடன் மார்தட்டிக்கொண்டிருந்த சமயம் இந்த சோக நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டாம்.

2009ஆம் ஆண்டிலாவது நம் இளைஞர்கள் அனைவரும் விழித்தெழ வேண்டும். நம்முடைய அறிவையும், ஆற்றலையும் நாட்டின் ஒற்றுமைக்குப் பயன்படுத்துவோம் என்பதை இலட்சியமாகக் கொண்டு அயராது உழைப்போம்.

ஆசிரியர் : **விஸ்வம்**

MON 9/1/8










*Founded by*
**B. Nagi Reddi and Chakrapani**

*Editor, Publisher* : B. Viswanatha Reddi (Viswam)
*Chief Executive Officer* : L. Subramanyan
*Consultant Editor* : K. Ramakrishnan
*Associate Editor* : Sowmya Rajendran
*Senior Artists:* K.C. Sivasankaran (Sankar), Gandhi Ayya, P. Mahesh
*Artist* : Jayapandian
*Assistant Editor* : R. Sudha
*Creative Writer* : R. Vaasugi
*Layout Designer* : B.A. Hemalata Malini

*CIRCULATION TEAM* :
*Chennai* : **T N Ravi Shankar, *National Sales Manager***
Mobile +91 99620 70014
email : ravishankar.tn@chandamama.com
**Fazal Khan, *Manager-Circulation & Institutional Sales - South***
Mobile +91 99625 67860
email : fazal.khan@chandamama.com
*Mumbai* : **Rajendra K Jadhav, *Asst. Manager - Circulation***
Mobile +91 9320565048
**CHANDAMAMA INDIA LTD.,** B-3, Lunic Industry
Opp. State Bank of India, Near Police Station Cross Road
No.6, MIDC Andheri (East), Mumbai-400093
Phone +91 22 28312872 / 28311849
email : rajendra.jadhav@chandamama.com
*New Delhi* : **Sushil Sharma, *Circulation Manager-North***
Mobile +91 98719 30767
**CHANDAMAMA INDIA LTD.,** Goyal Business Centre,
C-23/2 First floor, Connaught Place, New Delhi-110001
*Bangalore* : **P. Murali, *Asst. Circulation Manager -Karnataka***
Mobile +91 94488 36952
**CHANDAMAMA INDIA LTD.,** 18, 10th Cross, Mayura Street
Papanna Lay Out, Outer Ring Road, RMV 2nd Stage
Bangalore-560094, Phone +91 80 6655 1000
email:murali.p@chandamama.com
*Kolkata* : **Ananth Prakash, *Circulation Manager-East***
Mobile +91 98362 82202
email : ananth.prakash@chandamama.com
*Ahmedabad* : **Kalpesh Raval, *Sales Officer-Circulation***
Mobile +91 98245 19946
email : kalpesh.raval@chandamama.com
*Content Head - Online* : **Sowmya Bharadwaj**
email : sowmya.b@chandamama.com
*Head - Business Development* : **Surajit Agarwal**
email : surajit@chandamama.com
*Advertisement* : email : sales@chandamama.com
*Subscription Queries:* L Govindasamy
e-mail : govindaswamy.l@chandamama.com
*Customer Cell* : A B Sairam Mobile: +91 9841983774
e-mail : sairam.ab@chandamama.com
*Production Executive* : Panchakshari R Math
*Head Office* : **CHANDAMAMA INDIA LTD.,**
2/513 (Old 3/396), Sandeep Avenue East, 2nd Main Road,
Chinna Neelankarai, Chennai - 600 041
Phone +91 44 32402323
Email : chandamama@chandamama.com
Website : www.chandamama.com

**ANNUAL SUBSCRIPTION :**
Foreign : US$30 (including shipping and handling charges)

# வாசகர்களின் பக்கம்



ஈடு இணையற்ற ஏற்றமிகு நவம்பர் மாத 'அம்புலிமாமா' படித்தேன்! அட்டை-டு-அட்டை 76 பக்கங்களுக்குள் அடங்கிய படைப்புகளில் ஒன்று கூட சோடையில்லை! தொடர்ந்து 'புதிர்போட்டி'யில் வெற்றி பெற்றோர் இல்லையென்பது வருத்தத்தை அளிக்கிறது; போட்டியின் கடுமையைத் தளர்த்தி வெற்றிபெற உதவலாம். மூளைக்கு வேலை தரக்கூடிய 'குறுக்கெழுத்துப் போட்டி'யும் விடுகதைகளும் இடம் பெற்றால் இன்னும் சிறப்பாக இருக்கும்!

***போ. வெங்கடலட்சுமி, கு. கழுகாசலபுரம்***

அம்புலிமாமா படிக்கும் போது நான் கனவுலகுக்கே சென்று விடுகிறேன். படித்து முடித்தபின் அந்தக் கனவுலகத்திலிருந்து மீண்டும் திரும்ப மனம் வருவது இல்லை. அம்புலிமாமாவில் வரும் சாகசக் கதைகளும், மாய மந்திரக் கதைகளும் மிகவும் பிடித்திருக்கின்றன.

***இஸ்ரா, மித்னாப்பூர்***

படிக்கப் படிக்கத் திகட்டாத பத்திரிகை அம்புலிமாமா! எனக்குப் பல நாள்களாக ஒரு விஷயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆர்வமாக உள்ளது. எல்லா மொழிப் பதிப்புகளிலும் ஒரே கதைகள்தானா அல்லது ஒவ்வொன்றும் வெவ்வேறு கதைகளைக் கொண்டனவா? ஒரே கதைகள் தான் என்றால், புதிய மொழிகளை அம்புலிமாமா மூலம் கற்கலாமே!

***ரவி முத்தகி, தார்வாட்***



# வாய் பேசாத கடவுள்

**ல**ட்சுமிபுரத்தில் வசித்து வந்த சிவராஜன் ஒரு தெருப்பாடகன்! ஒவ்வொரு கிராமத்திலும், மனிதர்கள் கூடுமிடங்களில் சரித்திரப் புகழ் பெற்ற வீரர்களின் வரலாற்றுப் பாடல்களைப் பாடுவான். பாட்டைக் கேட்கும் மக்கள் அளிக்கும் சில்லறைக் காசுகளைக் கொண்டு தன் ஜீவனத்தை நடத்தி வந்தான்.

திருமணம் போன்ற விசேஷங்கள் நடக்கும் வீடுகளுக்குச் சென்று அங்கு மணமக்களை வாழ்த்திப் பேசுவான். அவர்களும் தாராளமாஹ தட்சிணை தருவார்கள்.

ஒருநாள் சிவராஜன் பைரவபுரம் என்ற கிராமத்திற்குச் சென்று பாட்டுப் பாடி சில்லறையும், உணவும் தானமாகப் பெற்றான். பிறகு அந்த கிராமத்து காஸ பைரவர் கோயிலின் அருகே அமர்ந்து தனக்குக் கிடைத்த உணவை உண்ணத் தொடங்கிய போது, அவனிடம் ஒரு நாய் வந்தது. தன் உணவின் ஒரு பகுதியை அதற்கு அளித்த போது, அது உண்ணவில்லை. மாறாக தன் முன்னங்கால்களை உயர்த்தி அவனை வணங்கியது. பின்னர் தன் முன்னங்கால்களால் மண்ணைக் கிளறிக் கொண்டே, வாலை ஆட்டியபடி குரலெழுப்பியது. தன்னிடம் அது ஏதோ ஒரு தகவலைத் தர விரும்புகிறது என்று புரிந்து கொண்ட சிவராஜன் அந்த நாயைப் பின் தொடர்ந்து சென்றான். அந்த நாய் அவனை அருகிலுள்ள ஒரு குடிசைக்குள் அழைத்துச் சென்றது. சிவராஜன் குடிசைக்குள் எட்டிப் பார்த்தான்.

உள்ளே வயதான ஒரு ஆள் வயிற்று வலியினால் துடித்துக் கொண்டிருக்க, அவனருகே அவன் மனைவி அவனுக்குப் பணிவிடை செய்து கொண்டு இருந்தாள். அந்த ஆ,ளின் நிலைமை

செந்தில் குமார்



யைத் தனக்கு உணர்த்தவே நாய் தன்னை அழைத்து வந்திருக்கிறது என்று புரிந்து கொண்ட சிவராஜன், உடனே தன் தோளில் தொங்கிக் கொண்டிருந்த பையிலிருந்து ஒரு மூலிகையை எடுத்து, அந்த ஆளிடம் கொடுத்துக் தின்னும்படிக் கூறினான். உடனே, அவனுடைய வயிற்று வலி மறைந்து விட்டது. சீதாராமன் என்ற அவனும், அவன் மனைவியும் சிவராஜனுக்கு நன்றி தெரிவித்தனர்.

அதற்கு சிவராஜன் புன்முறுவலுடன், ''இது சாதாரண விஷயம் தான்! எந்த விதமான கடுமையான நோய்க்கும் என்னிடம் மருந்து இருக்கிறது'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினான்.

சிவராஜனின் அற்புத வைத்திய த்தைப் பற்றி சீதாராமன் தம்பதி பைரவபுரம் முழுவதும் பிரசாரம் செய்ய, அவனைப் பற்றி கிராம மக்களும் பேசத் தொடங்கினர். அந்தக் கிராமத்து வைத்தியரான பசவராஜின் செவிகளையும் அந்த செய்தி எட்டியது.

அதைக் கேட்டதும் பசவராஜின் மனம் எரிமலையெனக் குமுறியது. நாடோடிப் பாட்டுக்கார சிவராஜ் தன் பிழைப்பையே கெடுத்து விடுவானோ என்ற பயம் ஏற்பட, உடனே அவன் கிராமதிகாரியை நோக்கிச் சென்றான். அவரிடம், ''தன்வந்திரியின் அவதாரம் என்று புகழப்படும் அமரேந்திரரின் சிஷ்யன் நான்! ஒரு நாடோடிப் பிச்சைக்காரனை இந்த ஊர்க்காரர்கள் தலையில் வைத்துக் கொண்டாடுகின்றனர். இப்போது என்னை ஒதுக்கி விட்டு அவனிடம் சிகிச்சைக்காகச் செல்கின்றனர். நீங்கள்தான் அவன் தலை எடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

உடனே கிராமதிகாரி சிவராஜனை வரவழைத்து, ''வைத்தியத்தில் பயிற்சி பெறாத நீ எப்படி நோயாளிகளுக்கு சிகிச்சை செய்யலாம்? உன் வைத்தியத்தை உடனே மூட்டைக் கட்டு'' என்று கட்டளையிட்டார்.

பிறகு சீதாராமனைக் கூப்பிட்டு வைத்தியத்தின் அரிச்சுவடி கூடத் தெரியாத சிவராஜனிடம் சிகிச்சை பெற்றதற்காகவும், கிராமமெங்கும் அவன் புகழைப் பரப்பியதற்காகவும் கண்டித்தார். பயந்து போன சீதாராமன் அவர் சென்னபடியே நடக்க சம்மதித்தான். ஆனால், சிவராஜன், ''நான் ஏன் மருந்து தரக்கூடாது? முறையாக ஒரு

வைத்தியரிடம் பயிற்சி பெற வில்லையே தவிர, நான் என் குடும்பத்தாரிடமிருந்து கை வைத்தி யத்தைக் கற்றிருக்கிறேன். பணம் கொடுத்து மருந்து வாங்க வசதி இல்லாதவர்களைப் பொறுத்தவரை, நானும் ஒரு சிறந்த வைத்தியர்தான்! இந்த விஷயம் வாய் பேசத் தெரியாத ஒரு நாய்க்குக் கூடத் தெரிந்து இருக்கிறது. அதனால் தான் அது பசவராஜனை விட்டு என்னைத் தேடி வந்தது'' என்றான்.

அதைக் கேட்டு வெகுண்ட கிராம அதிகாரி, ''வீடும், வாசலுமற்ற அநாதை நீ! உன் மீது இரக்கம் கொண்டு நாங்கள் போடும் பிச்சை யினால் வயிறு கழுவும் உனக்கு இத்தனைதிமிரா? உன் வைத்தியத்தின் பெருமை நாய்க்குக் கூட தெரிந்து இருக்கிறது என்றா சொன்னாய்? அதாவது அதற்கு இருக்கும் அறிவு கூட எனக்கில்லை என்கிறாயா? இனி உனக்கு இங்கு மட்டுமன்றி அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களிலும் யாரும் பிச்சை போட மாட்டார்கள்! அதற்கான ஏற்பாடுகளை செய்கிறேன்'' என்று கூச்சலிட்டார்.

அளவுக்கதிகமாகப் பேசிவிட் டோமோ என்று கலங்கிப் போனான் சிவராஜன். கிராமதிகாரி, கோபத்தால் ஆவேசப்பட்டு பிறப்பித்த உத்தர வினால், சிவராஜனுக்கு தானம் செய்வதை அனைவரும் நிறுத்தி விட்டனர். அன்று முழுவதும் பட்டினி கிடந்த சிவராஜன், பைரவர் கோயி லுக்கு வந்து அங்கேயே படுத்துத் தூங்கி விட்டான். மறுநாள் பொழுது விடிந்ததும், திடீரென யாரோ தன்னை எழுப்புவதை உணர்ந்து கண் விழித்த சிவராஜன் முன்தினம் தன்னை எழுப்பிய அதே நாய் தன் முன் நிற்பதைப் பார்த்தான். சற்று தொலை



வில் அந்த ஊர் வியாபாரியான ரத்தினம் ஒரு இலையை தரையில் விரித்து அதில் உணவுப் பண்டங்களை நிரப்பி அந்த நாயை உண்ண அழைப்பதையும் பார்த்தான். ஆனால், அது உண்ணமாமல் சிவராஜனை உண்ணும்படி சைகை செய்தது.

நடந்த விஷயம் இதுதான்! அன்று காலை பைரவர் கோயிலுக்கு வந்த ரத்தினம் பைரவருக்கு அர்ச்சனை செய்தார். பைரவருக்கு நைவேத்தியம் செய்தபின், அதை அவருடைய வாகனமான நாய்க்கு முதலில் படைக்கும்படி அர்ச்சகர் கூற, ரத்தினம் அந்த நாயை வருந்தி வருந்தி அழைத்துக் கொண்டிருந்தார்.

தான் உண்ணாமல் சிவராஜனை உண்ண அழைத்த நாயை வணங்கிய ரத்தினம், ''இது நிஜமாகவே கால பைரவரின் அம்சம்தான்! நாம் அனைவரும் ஊரை விட்டு ஒதுக்கி வைத்த சிவராஜன் மீது இது இரக்கம் கொண்டு பட்டினியாக இருக்கும் அவனைக் கூப்பிடுகிறது. இந்த நாய் மூலம் பைரவர் நமக்கு பாடம் புகட்டுகிறார்'' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினார்.

அதற்குள் விஷயமறிந்த கிராமதிகாரியும், பசவராஜனும் அங்கே வந்தனர். அந்தக் காட்சியைக் கண்டு வெட்கித் தலை குனிந்த பசவராஜ் கிராமதிகாரியிடம், ''ஆகா! நான் பெருந்தவறு செய்துவிட்டேன். இந்த நாயின் செயல் எனக்கு நல்ல பாடம் கற்பித்து விட்டது. சிவராஜன் எனக்குப் போட்டியாக வந்து விடுவானோ என்று அவன் மீது பொறாமைப்பட்டு அவனை ஊரை விட்டு ஒதுக்கி வைக்கவும் நான் காரணமாகி விட்டேன். மக்களுக்கு சிவராஜனுடைய தொண்டு மகத்தானது. தனக்குத் தெரிந்த வைத்தியத்தைக் கொண்டு ஏழை, எளியவர்களுக்கு இலவச மருந்து அளித்துக் தொண்டு செய்கிறான். சாட்சாத் அந்த கால பைரவரே இந்த நாயின் உருவத்தில் வந்து என் கண்களைத் திறந்து விட்டார்'' என்று நாயையும் சிவராஜனையும் பணிவுடன் வணங்கினான்.



# அம்பேத்காரின் மனங்கவர்ந்தவர்



சுதந்திரப் போராட்டத்தில் பங்கு பெற்ற வரும், தீண்டாமையை ஒழிக்கப் பாடுபட்டவரும் கீழ்சாதி மக்களின் நல்வாழ்விற்காகப் பாடுபட்டவருமான டாக்டர் பி.ஆர். அம்பேத்கார் இந்திய வரலாற்றில் தனக்கென்று ஒரு தனியிடம் பெற்றவர். 1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதி இந்தியாவில் குடியரசு ஆட்சி அமலுக்கு வந்தது. அதற்கான அரசியல் நிர்ணயச் சட்டம் உருவாக்க பட்டது. அதை உருவாக்கியவர் அம்பேத்கார்தான்! தாழ்ந்த குலத்தில் பிறந்து வாழ்க்கையின் அநீதியையும், அவமானத்தையும் எதிர்கொண்டவர் நாட்டில் நீதி, கட்டுப்பாடு, ஒழுங்கு முறை நிலவ அரசியல் நிர்ணயச் சட்டத்தையே உருவாக்கித் தந்த சிற்பி!

ஒவ்வொருவருக்கும் ஊக்கம் ஏதாவது ஒரு வழியில் பிறக்கிறது. அவ்வாறு அம்பேத்காரை ஊக்குவித்தவர் பல்வங்கர் பாலு! தார்வாடில் கீழ்சாதியில் தோன்றிய பாலு சிறுபருவ முதலே கிரிக்கெட்டில் ஆர்வம் மிகுந்து அபார மாகப் பந்து வீசினார். இருபதாம் நூற்றாண்டில் தொடக்கத்தில் இந்தியாவின் தலை சிறந்த பந்து வீச்சாளராகத் திகழ்ந்தவர் அவர்! தனது அபார திறமையி னாலும், கடின உழைப்பினாலும் இந்தியக் கிரிக்கெட் அணியில் இடம் பெற்றவர். அவருக்குப் பின் அவருடைய சகோதரர்களான சிவராம், கன்பத் விட்டல் ஆகியோரும் கிரிக்கெட்டில் ஒளிரத் தொடங்கினர். 1923ஆம் ஆண்டில் ஒரு போட்டியில் விட்டலின் அபாரப் பந்து வீச்சினால் அவருடைய அணி வெற்றிபெற, அவர் கீழ்சாதிக்காரர் என்பதையும் மறந்து அணியைச் சேர்ந்த மற்ற உயர்சாதியினர் அவரைத் தோள் மீது தூக்கி வைத்துக் கொண்டாடினர்.

கீழ்சாதியில் பிறந்தும் கிரிக்கெட்டில் சாம்பியனாகத் திகழ்ந்த பாலுவைப் பார்த்த பிறகுதான் அம்பேத்காரின் மனத்தில் உத்வேகம் பிறந்தது. தானும் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை தோன்றியது. பிற்காலத்தில் அம்பேத்கார் தன் மனங்கவர்ந்த பாலுவிற்காகப் பல பாராட்டு விழாக்களை ஏற்பாடு செய்தார்.

குடியரசு தினத்தை இந்த ஜனவரியில் கொண்டாடப் போகும் நாம் வரலாறு படைத்த இந்த நாயகர்களை என்றும் நினைவில் நிறுத்துவோம். ஒரு கிரிக்கெட் பந்தின் மூலம் அம்பேத்கார் போன்றவர்களுக்கு ஊக்கமளித்து அவர்களை வரலாற்று நாயகனாக்கிய பாலுவுக்கு அஞ்சலி செலுத்துவோம்.



# BACK ISSUE BHANGRA!

LAST DATE 31ST MARCH 2009




## Unwind with Chandamama's Rewind!

Pick your favourite year from the new millennium [2001-2007] and place an order to read all 12 *Chandamama** issues that year!

*Offer valid for Chandamama English, regional languages, and Junior Chandamama for a minimum period of one year on a first come first served basis. Cost per year will be calculated on cover price + Rs.300/- [shipping and handling charges].

**Payment to be made by DD or at par cheque drawn in favour of Chandamama India Ltd. payable at Chennai. Kindly send your request with name, full postal address, contact details and specification of the Language and Year.

Address: **Chandamama India Ltd.,** New 2/513 (Old 3/396), Sandeep Avenue East, 2nd Main Road, Chinna Neelankarai, Chennai - 600 041. Phone : +91-44-32402323
For further queries mail arul.balamurugan@chandamama.com

***If stock is not available, payment will be refunded.



# மண்டுக் கோட்டை

## 5

***(காலசம்பரன் என்ற மந்திரவாதி கும்பீரனுடைய கொம்பை உடைத்துக் காயப்படுத்தினான். அதே சமயம் ஓர் அம்பு காலசம்பரனையும் தாக்கியது. மந்திரவாதியும், ராட்சஸனும் குகைக்குள் ஓடினர். பிறகு...)***

கடம்ப ராஜ்ய வீரர்கள் 'அதோ ராட்சஸன்!'' என்று கூவிக் கொண்டே தூமலும், சோமனும் ஒளிந்திருந்த மரத்தினருகே ஓடிவந்தனர். அவர் களைத் தொடர்ந்து குதிரையில் வந்த ஒருவன், ''எங்கே ராட்சஸன்? அவனைப் பிடியுங்கள்!'' என்று கத்தினான். தீவட்டி வெளிச்சத்தில் அவன்தான் கடம்ப மன்னன் உக்கிர சேனன் என்று தெரிந்தது. மன்னனை அருகில் கண்டதும் சோமனுடைய ரத்தம் கொதித்தது. தான் கொல்ல விரும்பிய மன்னன் தன் அருகேயே வந்து விட்டதைக் கண்டு அவன் மீது அம்பு எய்திக் கொல்ல அவன் கைகள் துடித்தன. இத்தனை அருமையான வாய்ப்பு இனிமேல் கிடைக்காது என்று தோன்றியது. ஆனால், அவனைத் தடுத்த தூமல் அவன் காதில் ரகசியமாக ஏதோ கூற, சோமன் பூட்டி இருந்த அம்பை எடுத்து விட்டான்.

அதற்குள் சில கடம்ப வீரர்கள், ''ராஜா! நாங்கள் ராட்சஸனைத்




விஷயங்கள் குழப்பமாகவே இருக்கின்றன. நம்முடைய தூதர்களுடன் தூமலையும், சோமனையும் கடம்ப நாட்டுக்கு அனுப்பி, அவர்கள்தான் மந்திரி குமாரனைக் கொன்றவர்கள் என்று தெரிவித்தோம். தூதர்கள் சொன்னதை கடம்ப நாட்டு ராஜாவும், மந்திரியும் நம்பினார்களா என்று தெரியவில்லை. தகவலைத் தெரிவித்து அங்கிருந்து திரும்பிய நம் தூதர்கள் இன்னும் நாடு திரும்பவில்லை'' என்றான்.

''சே!'' என்று காலால் தரையை உதைத்த உக்கிரசேனன், ''கடம்ப நாட்டின் மீது படையெடுத்து சூறையாடியிருப்பேன். ஆனால், இந்தப் படுபாவி ராட்சஸன் என் பெண்ணைத் தூக்கிச் சென்று காரியத்தைக் கெடுத்து விட்டான்'' என்றார்.

தொடர்ந்து, ''அந்த ராட்சஸன் இங்குள்ள குகைளில் ஒன்றில் ராஜகுமாரியுடன் ஒளிந்து இருக்கிறான் என்று தோன்றுகிறது. குகைகளில் நுழைந்து தேடுங்கள்!'' என்று தன் வீரர்களுக்கு ஆணை இட்டான்.

திடீரென வீரர்கள் ஆரவாரக் கூச்சலும், காலடி ஓசையும் கேட்க நிமிர்ந்து பார்த்த உக்கிரசேனன் திடுக்கிட்டான். கடம்ப ராஜ்யத்து வீரர்கள்தான் அவர்களை நோக்கி வந்து கொண்டு இருந்தனர். கண்ணிமைக்கும் நேரத்தில் உக்கிரசேனனைப் பகை வீரர்கள் சூழ்ந்து கொண்டனர்.

''இது சரியல்ல!'' என்ற உக்கிரசேனன் கடம்ப வீரர்களை நோக்கி, ''முன்னறிவிப்பு இன்றி இப்படி

தாக்கிக் காயப்படுத்தி விட்டோம். இதோ பாருங்கள்! தரையில் அவனுடைய ரத்தம் சிந்தி இருக்கிறது'' என்று பரபரப்புடன் கூறினர்.

உடனே உக்கிரசேனன் தீவட்டி வெளிச்சத்தில் தரையில் சிந்தியிருந்த ரத்தத்தைப் பார்த்தான். ஓரிடத்தில் இன்றி, பல இடங்களில் ரத்தம் சிந்தியிருந்தது.

''சேனாதிபதி! பல இடங்களில் ரத்தம் சிந்தியிருப்பதைப் பார்த்தால், ஒரு யுத்தமே நடந்து இருக்கிறது என்று தோன்றுகிறது. இந்த இடத்தில் தான் அன்று குந்தள ராஜ்ய மந்திரி குமாரன் சசிகாந்தனையும், அவன் உடைய நண்பர்களையும் தாக்கினோம்,'' என்றான் உக்கிரசேனன்.

அதற்கு சேனாதிபதி, ''ஆம் மகாராஜா! ஆனால், அதற்குப்பின் நடந்த

திடீரென எங்களைத் தாக்கிப் போர் புரிய வருவது சரியல்ல!'' என்றான்.

''குந்தள ராஜா! நீங்கள் மட்டும் முன்னறிவிப்பின்றி அத்துமீறி எங்கள் ராஜ்ய எல்லைக்குள் வரலாமா? நீங்கள் அனுமதியின்றி எங்கள் எல்லைக்குள்நுழைந்ததைப் பார்த்துக் கொண்டு எங்களால் எப்படி சும்மாயிருக்க முடியும்?'' என்று கேட்டவாறே முன் வந்தான் குந்தள சேனாதிபதி.

பிறகு அவன் உக்கிரசேனனைக் கைது செய்ய முயல, உடனே குந்தள வீரர்கள் அதைத் தடுக்க முயல, இருதரப்பினருக்குமிடையே போர் மூண்டது. தன்னைப் பிடிக்க வந்த விரர்களிடமிருந்து நழுவிச் சென்று பின்னடைந்த உக்கிரசேனன் தன்னைச் சுற்றி ஒரு தற்காப்பு வளையத்தை ஏற்படுத்திக் கொண்டான்.

எதிர்பாராது ஏற்பட்ட இந்த தடங்கலினால், உக்கிரசேனன் கலக்கமுற்றான். தன் மகளைத் தேடி அலைந்து காட்டினில் திரியும்போது, கடம்ப ராஜ்யத்திற்குள் கால் வைக்க நேரிட்டது. அதை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு அந்த நேரத்தில் கடம்ப வீரர்கள் போருக்கு வருவார்கள் என்று எதிர்பார்க்கவில்லை.

அதே சமயம் சோமன், தூமலை உலுக்கி, உக்கிரசேனன் மீது வஞ்சம் தீர்க்கலாமா என்று சைகை செய்ய, அவன் ''சோமு! இதுதான் நல்ல வாய்ப்பு! இப்போது உக்கிரசேனனைக் கொன்றால் கடம்ப வீரர்கள்தான் கொன்று விட்டனர் என்று நினைப்பார்கள். நம் மீது யாருக்கும் சந்தேகம்



தோன்றாது. சரி, உக்கிரசேனனை நீ எமலோகம் அனுப்புகிறாயா, அல்லது நான் அனுப்பட்டுமா?'' என்று கேட்டான் தூமல்.

அவன் சொல்லி முடிப்பதற்குள் சோமன் வில்லில் அம்பைத் தொடுத்து உக்கிரசேனன் மீது குறிபார்த்து விட்டான். அப்போது தொலைவில் ஒரு ஆராவார ஒலி கேட்க, திடீரென உக்கிரசேனன் நகர்ந்து கொண்டு ஒலி வந்த திசையை நோக்க, அவன் நெஞ்சுக்குக் குறிவைக்கப்பட்ட அம்பு அவன் கையில் தைத்தது. அலறிக் கொண்டே கீழே விழுந்த உக்கிரசேனனைத் தூக்கிக்கொண்டு குந்தள வீரர்கள் ஓட முயலுகையில், கடம்ப வீரர்கள் அவர்களைத் தாக்கினர்.

''தப்பியோடும் பகைவர்களை பின்புறத்திலிருந்து தாக்குவது தவறு!''



என்று கம்பீரமாக ஒரு குரல் ஒலித்தது. கடம்ப மந்திரி கங்காதரர் தன் வீரர்களுடன் அங்கே வந்தார். அவருடைய ஆணையைக் கேட்டதும் கடம்ப வீரர்கள் தாக்குதலை நிறுத்த, குந்தள வீரர்களும் செயலிழந்து நின்றனர்.

உக்கிரசேனனை அணுகிய கங்காதரன் ''உக்கிரசேனரே! இந்த சமயத்தில் காட்டில் ஏன் திரிந்து கொண்டு இருக்கிறாய்?'' என்று வினாவினார். தன் கையில் தைத்த அம்பை எடுக்கவும் முடியாமல் அதனால் உண்டான வலியையும் பொறுக்க முடியாமல் உக்கிரசேனன் வேதனையில் முனகினான். ''உக்கிரசேனா! ஒரு அம்பு கையில் தைத்ததற்கா இப்படி துடிக்கிறாய்? உன்னை மகா வீரன் என்று நினைத்தேனே! நீங்கள் காயப்படுத்தி அனுப்பிய எங்கள் பத்ரியின் உடலில் பல அம்புகள் தைத்திருந்தன. அந்தக் காயத்துடன் அவன் குதிரையிலேறி அரண்மனையை அடைந்தது மட்டுமன்றி, சிரித்துக் கொண்டே நடந்த விஷயங்களை விளக்கினான். உன்னைப் போல் முனகவில்லை'' என்று கங்காதரர் இளக்காரமாகப் பேசினார்.

'கடவுளே! பத்ரி உண்மையைக் கூறிவிட்டானா? மந்திரியின் மகனைக் கொன்றது யார் என்று தெரிந்து விட்டதா? அதற்குப் பழி வாங்கத்தான் மந்திரியே நேரில் வந்து விட்டாரா?' என்று கலங்கினான் உக்கிரசேனன்.

ஆனால், கங்காதரரை உற்று நோக்கியவனுக்கு அவர் முகத்தில் பழிவாங்கும் கொலைவெறி காணப்படவில்லையென்று தெரிந்து சற்றே தைரியம் அடைந்தான். உக்கிரசேனனை ஒரு பாறையின் மீது உட்காரச் சொன்ன கங்காதரர் அவனைச் சூழ்ந்து இருந்த வீரர்களை விலகச் சொன்னார்.

பிறகு அவனை நோக்கி நிதானமாக, ''உக்கிரசேனா! நான் ஏற்கெனவே புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிறேன். உன்னைப் பழி வாங்குவதைவிட, என் புதல்வனுக்கு ஏன், எப்படி, யாரால் அந்த விபத்து நடந்தது என்பதை முதலில் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். உண்மையிலேயே என் மகன் இறந்து விட்டான் என்றால் அவனைக் கொன்றது யார்? அவனுடைய உடலைக் கண்ணால் காணும்வரை அவன் இறந்து விட்டான் என்ற செய்தியை

நம்ப நான் தயாராக இல்லை. என்ன நடந்தது சொல்!'' என்றார்.

அதற்கு உக்கிரசேனன், ''மந்திரி! முதலில் என்னுடைய சோகக்கதையை முதலில் கேளுங்கள். கண்ணுக்குள் கண்ணான என் மகளைப் பறிகொடுத்துவிட்டு, அவளைக் காணாமல் நான் தவிக்கிறேன். அவளைத் தூக்கிச் சென்ற ராட்சஸனைத் தொடர்ந்து இங்கு வந்தேன். நீங்கள் எவ்வாறு உங்கள் புதல்வனைப் பிரிந்து தவிக்கிறீர்களோ, அதே போல் நானும் அவளை உயிரோடு பறிகொடுத்துவிட்டுத் தவிக்கிறேன். நேற்றிரவு...'' என்று அவன் விளக்கமாகக் கூற முயலுகையில், கங்காதரரின் பார்வை தரையில் பட்டது.

''அட இது என்ன?'' என்றவாறே அங்கிருந்த கொம்பைக் கையில் எடுத்தவர், ''இது ஏதோ ராட்சஸனுடைய கொம்பு போல் இருக்கிறதே! அவனுடைய கொம்பை உடைத்தவர் யார்?'' என்று கேட்டார்.

''மந்திரி! இது அந்த ராட்சஸனுடைய கொம்புதான்! அவன்தான் என் பெண்ணைத் தூக்கிச் சென்றவன். அவனை இன்னும் நான் பார்க்கவில்லை. அவனுடைய கொம்பு தானாக உடைந்ததா அல்லது யாராவது உடைத்தார்களா என்று தெரியவில்லை'' என்றான் உக்கிரசேனன்.

தன்னைப்போலவே உக்கிரசேனனும் மகளைப் பிரிந்து தவிக்கிறான் என்று அறிந்ததும், கங்காதரருக்கும் அவன் மீது சிறிது இரக்கம் உண்டாயிற்று. உடனே, தன்னுடன்



அழைத்து வந்திருந்தவர்களில் மருத்துவ சிகிச்சை தெரிந்த ஒருவரைக் கூப்பிட்டு, உக்கிரசேனனின் கையில் இருந்து அம்பை மெதுவாக வலி இல்லாமல் அகற்றச் சொன்னார். பிறகு, உக்கிரசேனனின் காயத்திற்கு மருந்திடச் சொன்னார்.

''உக்கிரசேனா! பகைவனாக இருந்தாலும், நீ காயமுற்றிருப்பதால் உனக்கு சிகிச்சை அளிப்பது அவசியம். இந்த சமயம் உன்னைப் பகைவனாகக் கருதாமல் ஒரு நோயாளியாகக் கருதுகிறேன். என்னுடைய மகன் இங்கு எங்காவது படுகாயத்துடன் காணப்பட்டால், அவனுக்கு உடனடி சிகிச்சை அளிப்பதற்காகவே, மருத்துவம் தெரிந்த ஒருவனை என்னுடன் அழைத்து வந்தேன்,'' என்றார்.

உக்கிரசேனனின் கையில் தைத்து

இருந்து அம்பை சோதித்த கடம்ப சேனாதிபதி மந்திரியிடம் ரகசியமாக ஏதோ சொல்ல, அவரும் அம்பை கவனத்துடன் நோக்கினார். பிறகு உக்கிரசேனனை நோக்கி, ''உன்னை காயப்படுத்தியவன் எங்கள் வீரர் களில் ஒருவனுமில்லை. இந்த அம்பில் உன்னுடைய ராஜ முத்திரை உள்ளது. உன் நாட்டைச் சேர்ந்த ஒருவன் தான் உன் மீது அம்பெய்தி இருக்கிறான். ஒருவேளை, நீ என் மகனைக் கொன்றவர்கள் என்று பழி சுமத்தி சோமன், தூமல் என்று இருவரை அனுப்பினாயே! அவர் களில் ஒருவன்தான் உன் மீது அம்பு எய்தியிருப்பானோ என்று தோன்று கிறது. ஏனெனில் உன்னுடைய தூதர் களிடமிருந்து அம்புகளைப்பிடுங்கி அவர்களிடம் என் சேனாதிபதி கொடு த்தாராம். அதே ஆள்தான் ராட்சஸ னின் கொம்பையும் உடைத்து இருக்கலாம்!'' என்றார் கங்காதரன்.

அந்த அம்பினை உற்று நோக்கிய உக்கிரசேனன் ''நீங்கள் சொல்வது உண்மைதான்! அந்தப் பாவிகள் இருவரும் இங்கேதான் எங்கோ ஒளிந்து கொண்டிருக்கின்றனர் என்று நினைக்கிறேன்'' என்றவன் தன் வீரர்களை நோக்கி, ''அந்த துரோகிகள் இருவரும் எங்கிருந்தாலும் தேடிக் கண்டு பிடியுங்கள்!'' என்றான்.

அதற்கு கங்காதரன், ''உக்கிரசேனா! இங்கு கட்டளையிட அதிகாரம் உள்ளவன் நான்தான்! இது என் ராஜ்யத்தின் எல்லைக்குள் உள்ளது. என்னுடைய மகனை உயிரோடு அல்லது பிணமாகப் பார்க்கும் வரை நீயும், உன் வீரர்களும் என் கைதிகள். இங்கு எங்கள் மன்னர் சாந்தவர்மரின் அதிகாரம்தான் செல்லும்!'' என்றவர், தன் சேனாதிபதியை நோக்கி, ''அந்த தூமலையும், சோமனையும் தேடுங் கள்! அவர்களைப் பெயர்ச்சொல்லிக் கூப்பிடுங்கள். அவர்கள் குற்ற மற்றவர்கள் என்றும், அதனால் பயப்பட வேண்டாமென்றும் குரல் கொடுங்கள். அவர்களிடமிருந்து என் மகனைப் பற்றிய உண்மையை அறிய வேண்டும்'' என்றார்.

கங்காதரரின் சொற்களைக் கேட்ட உடன் அடுத்தக்கணமே ''சாந்தவர்மர் வாழ்க!'' என்று கூக்குரலிட்டுக் கொண்டே தூமலும், சோமனும் மரத்திலிருந்து குதித்தனர்.



# சசிகலா எடுத்த முடிவு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கிக் கொண்டு இருந்த உடலைக் கீழே வீழ்த்தினான். பிறகு அந்த உடலைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா! உன்னுடைய மன உறுதியைப் பாராட்டுகிறேன். உன் லட்சியத்தை நீ அடைய எடுத்துக் கொள்ளும் முயற்சிகளையும் பாராட்டுகிறேன். சிலர் ஏதோ ஒன்றை அடைவதற்காகப் பாடு பட்டு, பின்னர் தவறான முடிவு எடுக்கின்றனர். சசிகலா என்ற பெண் அடைய நினைத்தது ஒன்று! ஆனால், அது நிறை வேறும் வேளையில் தவறாக ஒரு முடிவு எடுத்துவிட்டாள்.

நவீன வேதாளக் கதை



அவளுடைய கதையைக் கூறுகிறேன், கேள்'' என்றது.

ஜெகந்நாதபுரியில் ஜெகன் என்ற சிறுவன் வசித்து வந்தான். அவனுக்குக் கல்வி கற்க வேண்டும் என்ற தீவிர ஆர்வக்கோளாறினால், ஜெகன் வீட்டை விட்டு ஓடி வந்து விட்டான். மனம் போனபடி பல ஊர்களை சுற்றியபின் ஒருநாள் ஒரு ஊரில் ஆற்றங்கரையில் அமர்ந்து சிந்தனை செய்தான். அப்போது ''ஐயோ! காப்பாற்றுங்கள்!'' என்ற கூக்குரல் காதில் விழ, நிமிர்ந்து பார்த்தவனின் கண்களுக்கு ஆற்றில் மூழ்கித் தத்தளித்துக் கொண்டிருந்த ஒரு சிறுவன் தென்பட்டான். உடனே, ஆற்றில் குதித்து நீச்சலடித்து அவனைக் காப்பாற்றி விட்டான்.

அந்தச் சிறுவன் பெயர் நவநீதன் என்றும், பள்ளியில் படித்து வந்த மாணவன் என்றும் அறிந்தான். படிப்பதில் விருப்பமற்ற அவனைப் பள்ளியில் சென்று படிக்கும்படி அவன் பெற்றோர் வற்புறுத்தினர். ஆனால், படிப்பு ஏறாததால் தினமும் குருவிடம் அடிவாங்க நேர்ந்தது. அதனால் வெறுப்புற்ற நவநீதன் ஆற்றில் குதித்து உயிரை மாய்த்துக் கொள்ள முடிவு செய்தான். ஆனால், குதித்த பின் மனம் மாறிக் கூச்சலிட ஜெகனால் காப்பாற்றப் பட்டான்.

தன்னைக் காப்பாற்றிய ஜெகனிடம் அவனுக்கு நன்றி விசுவாசம் ஏற்பட, அவனைத் தன் உயிர் நண்பனாக பாவிக்கத் தொடங்கினான்.

ஒருநாள் நவநீதன் ஜெகனிடம், ''உனக்குப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் உள்ளது. அதனால் நீ பள்ளியிலோ அல்லது தனியாக ஏதாவது ஓர் ஆசிரியரிடமோ கல்வி கற்பாய். அதற்கான பணத்தை நான் சம்பாதித்துத் தருகிறேன்'' என்றான். அதைக் கேட்டு, ஜெகன் மகிழ்ச்சியில் மூழ்கினான். நவநீதனுடன் அவனுக்கு இருந்த நட்பு மேலும் ஆழமானது. பலவித இடங்களில் வேலை செய்து நவநீதன் சம்பாதித்துக் கொடுக்க, ஜெகன் ஆசிரியரிடம் தட்சிணை கொடுத்து நன்றாகக் கல்வி கற்றான். காலப்போக்கில் இருவரும் வளர்ந்து வாலிபர்கள் ஆயினர்.

ஒருநாள் அவன் நவநீதனிடம், ''நான் கூடுபாய்தல் என்ற வித்தையை கற்க வேண்டும். அதற்கு நீ உதவி செய்வாயா?'' என்று கேட்க, நவநீதனும் சம்மதித்தான்.

பிறகு அதைப் பற்றிய விவரங் களை சேகரித்த ஜெகன் ஆதிமூலர் என்ற சித்தருக்கு அந்த வித்தை தெரியும் என்று அறிந்தான். இரு வரும் அவரை நோக்கிச் சென்றனர். ஒரு காட்டில் தனியாக ஆசிரமம் அமைத்து வசித்து வந்த ஆதிமூலரை அடைந்து அவர் பாதங்களில் விழுந்து வணங்கினர். பிறகு ஜெகன் தான் வந்த விஷயத்தைக் கூறி, தனக்கு அந்த அபூர்வ வித்தையைக் கற்றுத் தருமாறு கெஞ்சினான். ஆனால், அவர் மறுத்து விட்டார். ஜெகன் போன்ற சாதாரண இளைஞர்களுக்கு அந்த வித்தை தெரிந்தால் அதை தவறாகப் பயன் படுத்துவார்கள் என்று எண்ணினார். அதனால் அந்த வித்தையை யாரு க்கும் கற்றுக் கொடுக்கக் கூடாது என்றும் எண்ணினார்.

உடனே ஜெகன் பணிவுடன், ''சுவாமி! உங்களுக்குத் தெரிந்த அந்த அபூர்வ வித்தையைக் கற்கும் தகுதி எனக்கு இல்லை என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால், நாங்கள் இருவரும் வெகு தொலைவில் இருந்து வருகிறோம். ஆகையால் உங்களுடைய ஆசிரமத்தில் தங்கி உங்களுக்குப் பணிவிடை செய்வ தற்கு அனுமதியுங்கள்'' என்றான்.

அதற்கு ஆதிமூலர் பதில் சொல்லா ததால் மௌனம் சம்மதத்திற்கு அறி குறி என்று பொருள் கொண்டு இரு வரும் ஆசிரமத்திலேயே தங்கினர். அவருக்கு வேண்டிய பழம், மூலிகை களைக் கொண்டு வருதல் சமையல் செய்தல், ஆசிரமத்தை சுத்தம் செய்தல்



போன்ற சகல வேலைகளையும் தாங்களே செய்தனர். இவ்வாறு மூன்று மாதங்கள் சென்றன.

ஒருநாள் காலையில் இருவரையும் தன்னருகில் அழைத்த சித்தர், ''என்னு டைய அந்திமக்காலம் நெருங்கி விட்டதை உணர்கிறேன். கூடுவிட்டு கூடுபாயும் வித்தை என்னுடன் மறைந்து விடுவதை நான் விரும்ப வில்லை. அதனால் அந்த வித்தையை ஜெகனுக்கு கற்றுத் தருவதென்று தீர்மானித்து இருக்கிறேன். ஆனால், இந்த வித்தையை தவறான முறையில் ஜெகன் பயன்படுத்தாமல் தடுக்கும் பொறுப்பை நவநீதனிடம் ஒப்படை க்கப் போகிறேன்'' என்றார்.

பிறகு ஜெகனை அருகில் அழைத்து அவன் காதில் வித்தையின் மந்திர த்தை உபதேசம் செய்தார். பிறகு நவநீதனை அழைத்து அவனுடன்



சிறிது நேரம் கழித்தார். சற்று நேரத்திற்குப் பிறகு அவருடைய உடலில் இருந்து ஆவி பிரிந்தது. அவருடைய அந்திமக் கிரியைகளை ஜெகனும் நவநீதனும் செய்து முடித்த பின், தங்கள் ஊரை நோக்கிப் புறப்பட்டனர்.

வரும் வழியில் அவர்கள் ஹஸ்தின கிரி எனும் நகரத்தினை அடைந்த போது, அங்கே நகர மக்கள் அனைவரும் சோகத்தில் மூழ்கி இருந்தனர். ஹஸ்தினகிரியின் மன்னரான ராஜ பூஷணத்தின் ஒரே மகனான சுதாமா ஒரு விபத்தில் அன்று இறந்து விட்டது தான் நகரமக்களின் சோகத்திற்கு காரணமாகயிருந்தது. மன்னரும், ராணியும் அதிர்ச்சியைத் தாங்க முடியாமல் மயக்கம் அடைந்தனர்.

உடனே நவநீதன் ஜெகனிடம், ''நண்பா! நீ சுதாமாவின் உடலில் புகுந்து அவனை உயிர் பெற்றெழச் செய்வாய்'' என்றான்.

''அதில் என்ன பயன்? நான் நிரந்தரமாக சுதாமாவின் உடலில் தங்க முடியாதே!'' என்றான் ஜெகன்.

''ஒரு துயர சம்பவம் திடீரென நிகழும்போது அது பெரும் அதிர்ச்சியைத் தருகிறது. அதனால்தான் மன்னரும், ராணியும் மயக்கமடைந்து உள்ளனர். நீ சில ஆண்டுகள் உன் ஆவியை சுதாமாவின் உடலில் தக்க வைத்தால், என்றாவது ஒரு நாள் உண்மையறிந்தபின் சிறிது சிறிதாக மனத்தைத் தேற்றிக் கொள்வார்கள்'' எனறான் நவநீதன்.

அவன் உடனே தன் ஆவியை இறந்து கிடந்த சுதாமாவின் உடலில் புகுத்தி சுதாமாவை உயிர் பெறச் செய்தான். பிறகு நவநீதன் ஜெகனின் உடலைப் பத்திரமாக ஒரு மறைவான இடத்தில் ஒளித்து வைத்தான்.

இறந்து போனதாகக் கருதப்பட்ட சுதாமா திடீரென உயிர்பெற்று எழுந்ததும், மன்னரும், ராணியும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர்.

சுதாமாவின் உடலில் புகுந்தபின் ஜெகனின் குணங்களிலும், நடவடிக்கைகளிலும் மாற்றம் ஏற்படத் தொடங்கின. அரை வயிறு உண்டு வாழ்ந்தவனுக்கு இப்போது அறுசுவை உணவு கிடைத்தது. சுதாமா இறப்பதற்குமுன் ஒரு பிரபல வியாபாரியின் மகள் சசிகலாவிற்கும் அவனுக்கும் திருமணம் நிச்சயிக்கப் பட்டிருந்தது.

ஒரு நாள் முன்பு பேசிக் கொண்ட

படி அவன் நவநீதனைச் சந்தித்தான். அப்போது நவநீதன் சுதாமாவின் உடலில் இருந்த ஜெகனிடம் தன் உடலுக்குத் திரும்பும்படிக் கூறினான்.

''நான் ஏன் என் உடலில் புக வேண்டும்? நான் இந்த நாட்டுக்கு ராஜாவாக விரும்புகிறேன்'' என்று ஜெகன் மறுத்து விட்டான்.

சசிகலாவை மணம்புரிய மூன்று நாள்களே எஞ்சியிருக்கையில், ஒரு நாள் ஜெகன் ரதத்தை கண்மூடித் தனமான வேகத்தில் ராஜவீதியில் செலுத்தி, மன்னரின் தூரத்து உறவினர் மீது ரதத்தை மோதிக் கொன்று விட்டான். நீதி வழங்குவதில் மிகவும் நேர்மையான மன்னர் தன் மகனைக் கூண்டில் நிறுத்தி, விசாரணை செய்து, அவனைக் குற்றவாளி என்று முடிவான பின் சுதாமாவின் உடலைவிட்டு விலக இதுதான் சமயம் என்று கருதி உடனே தன் உயிரை சுதாமாவின் உடலில் இருந்து அகற்றினான். மீண்டும் தன் உடலில் புகுந்து கொள்ள அவன் விரும்பவில்லை. பக்கத்து கிராமத்தில் அன்றுதான் விபத்தில் உயிர் நீத்த சிவதத்தன் என்ற பணக்கார வியாபாரியின் உடலில் புகுந்து கொண்டான்.

தான் மணக்கவிருந்த சுதாமா தூக்கு மேடையில் தூக்கிலிடப்படுவதற்கு முன்னமே இறந்து போனதை எண்ணி சோக வெள்ளத்தில் மூழ்கினாள். தானும் உயிரை விட்டுவிடலாம் என்று அவள் நினைத்தபோது அவள் முன் தோன்றினான் நவநீதன். நடந்த வற்றை அவளுக்கு விளக்கினான்.



''சசிகலா! நீ மணப்பதாக இருந்த சுதாமாவின் உடலில் ஜெகனின் ஆவி தான் இருந்தது. இப்போதும் ஜெகன் இறக்கவில்லை. அவன் தன் உயிரை சிவதத்தன் உடலுக்குள் செலுத்தி விட்டு, சிவதத்தனாக வாழ்கிறான். இவ்வாறு ஜெகன் வித்தையைத் தவறாகக் பயன்படுத்தக்கூடாது என்று சந்தேகித்த சித்தர் அதைத் தடுக்க எனக்கு ஒரு மந்திரம் உபதேசம் செய்திருக்கிறார். நீ விரும்பினால் சிவதத்தனை மணம் புரியலாம். இல்லையேல் சித்தர் எனக்கு சொல்லிக் கொடுத்த மந்திரத்தினால், ஜெகனின் உயிரை சிவதத்தனிடம் இருந்து அகற்றி, அவனுடைய உடலிலே புகுத்த முடியும். அதன் பிறகு அவனால் கூடுவிட்டு கூடு பாய முடியாது. உன் முடிவு என்ன?'' என்றான்.

அதற்கு சசிகலா, ''ஜெகனின் உயிர் அவன் உடலிலே இருக்கட்டும். அதன்பிறகு அவனை நான் மணம் செய்து கொள்கிறேன்'' என்றாள்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் விக்கிரமனைப் பார்த்து ''மன்னா! பெண்புத்தி பின் புத்தி என்பது எவ்வளவு சரியென்று பார்த்தாயா? சுதாமாவை விட்டு ஜெகனை மணம் புரிய சம்மதித்த சசிகலாவின் முடிவு முட்டாள்தனமாக இல்லையா? ஜெகனின் சொந்த உடலிலேயே அவன் ஆவியை ஏன் புகுத்தச் சொன்னாள்? என் சந்தேகத்திற்கு பதில் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''பணக்காரன் ஏழையாவதும், ஏழை பணக்காரன் ஆவதும் இயற்கை! சசிகலா ஐஸ்வரியத்தைப் பொருட்படுத்தவில்லை. அவள் மணம் புரிய விருந்தது சுதாமாவின் உடலிலிருந்த ஜெகனைத்தான்! உடலைவிட மனிதனுக்கு உயிர்தான் பிரதானம்! அதனால் அவள் திருமணம் நடந்திருந்தாலும் உண்மையில் ஜெகன்தான் அவள் கணவனாக இருந்திருப்பான். ஜெகனுடைய ஆவி சுதாமாவின் உடலில் இருந்த போது, அவனுடைய எளிய குணங்கள் மாறி, அகம்பாவமும், திமிரும் உண்டாயின. ஆக, அவன் எந்த உடலில் புகுந்து கொள்கிறானோ அதற்கேற்ப அவனுடைய குணங்கள் மாறலாம். ஆனால், ஜெகனின் உடலிலேயே அவன் உயிர் தங்கினால், அவனுடைய அறிவும், நல்ல குணங்களும் மாறாது.

ஜெகனின் அறிவையும் நற்குணங்களையும் அவள் விரும்பியதால், ஜெகனின் சொந்த உடலிலேயே அவன் உயிர் இருப்பதை சரியென்று கருதி அவ்வாறு முடிவெடுத்தாள். அதனால் அவள் எடுத்த முடிவு சரியே'' என்றான்.

விக்கிரமனது பதிலினால் அவனுடைய மௌனம் கலைய வேதாளம் தான் புகுந்திருந்த உடலுடன் பறந்து சென்று மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.



# சிறுவர்களின் செய்திக் குறிப்புகள்

## நடமாடும் பெண் தெய்வம்



**நே**பாளத்தில் ஒரு சிறுமியைத் தேர்ந்தெடுத்து அவளைக் கடவுளாக வழிபடும் வழக்கம் தொன்று தொட்டு நிலவுகிறது. ஸ்ரியா பஜ்ராச்சாரியா என்ற ஒரு விவசாயியின் மகள் தற்போது புதிய பெண் தெய்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறாள். பக்தாபூர் (காட்மண்டு அருகிலுள்ள) குமாரி என்று இவள் இனி அழைக்கப் படுவாள். இதற்கு தற்போதைய மாயிஸ்ட் அரசும் ஒப்புதல் தந்துள்ளது. தற்போது ஆறு வயது நிரம்பியுள்ள ஸ்ரியா பன்னிரெண்டு வயது வரை இந்த கௌரவத்தைப் பெறுவாள். அதற்குப்பின் மற்றொரு குமாரி தேர்ந்து எடுக்கப்படுவாள்.

குமாரியாகத் தெர்ந்தெடுக்கப்படுவதற்கு மிகக் கடுமையான 32 நிபந்தனைகள் உள்ளன. அந்தச் சிறுமிக்கு சிங்கத்தைப் போல் மார்பும், மான் களைப் போல் தொடைகளும் இருக்க வேண்டும். பலியிடப்பட்ட ஒரு எருமை மாட்டுடன் ஓர் அறையில் பயப்படாமல் தங்க வேண்டும். இவை மேற்குறிப்பிட்ட 32 நிபந்தனைகளில் சில!

## தபால்தலை சேகரிப்பதில் சாதனை

**ந**ம்மில் பெரும்பாலோர் கடிதங்களில் தபால்தலைகளை ஒட்டி அனுப்புவதோடு சரி! ஆனால், சிலர் அந்தத் தபால்தலைகளை சேகரிப்பதில் பெரும் ஆர்வம் காட்டு கின்றனர். அவர்களுள் முஷாம் ஆதர்ஷூம் ஒருவன்! உலகிலேயே மிகக் குறைந்த வயதிலே தபால்தலை சேகரிப்பவன் என்பதற்காக பரிசு பெற்றுள்ளவன் இவன்!

அந்தப் பரிசைப்பெறும்போது இவன் வயது மூன்று ஆண்டுகள் ஒன்பது மாதங்கள் மட்டுமே! ஹைதராபாதில் சமீபத்தில் நடைபெற்ற ஒன்பதாவது ஆந்திரப் பிரதேஷ் போஸ்டல் சர்க்கிள் பிலடெலிக் எக்சிபிஷனில் இவன் சேகரித்த தபால்தலைகள் பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டு இருந்தன.



டோங்கா, குக்தீவுகள், பிட்கேய்ர்ன் தீவுகள், ஃபிஜி, கிரிபாட்டி, கிறிஸ்துமஸ் தீவுகள், மாரிஷியஸ், ஐஸ்லாந்து ஆகிய சின்னஞ்சிறு தீவுகளை உலக வரைபடத்தில் இவன் உடனே காட்டிவிடுவான்.

உயிரியல் பூங்காவிலுள்ள மிருகங்களின் தபால்தலைகள் எந்த நாட்டைச் சேர்ந்தவை என்று இவனால் உடனே சொல்ல முடியும்.



# துருவன்

எளியவர்களாகிய நம்மை பலம் பொருந்திய தீயவர்கள் துன்புறுத்தி அவமானப் படுத்தலாம். அத்தகைய வலியவர்களின் அடாத செயலைக் கண்டு மனமுடைந்து போவதில் பயனில்லை. கடவுள் மீது நம்பிக்கை வைத்து நமக்கு ஏற்படும் கஷ்டங்களை மனம் தளராமல் எதிர்கொள்ள வேண்டும் என்ற சத்தியமான தத்துவத்தை எடுத்துக்காட்டவே இவ்வுலகில் தோன்றியவன் துருவன்!

உத்தானபாத மன்னருக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். முதல் மனைவி சுநீதியின் புதல்வன்தான் துருவன்! இரண்டாவது மனைவியான சுருசியின் புதல்வன் உத்தமன்!

ஒருநாள் உத்தானபாதர் தன் மடியில் உத்தமனை உட்கார வைத்து கொஞ்சிக் கொண்டிருந்தபோது, அங்கே துருவன் வந்தான். தானும் தகப்பனாரின் மடியில் உட்கார வேண்டும் என்று அவன் விரும்பியபோது, அவனுடைய சிற்றன்னை சுருசி அவனிடம், ''அப்பாவின் மடியில் உட்காரும் தகுதி உனக்கு இல்லை. அது என் பிள்ளைக்கு மட்டுமே உண்டு. நீயும் அவர் மடியில் உட்கார வேண்டுமானால், நீ என் வயிற்றில் பிறந்து இருக்க வேண்டும்'' என்று கடுஞ்சொற்களை அள்ளி வீசினாள்.

அவ்வாறு தன் இளைய ராணி கூறியதைக் கேட்டு உடனே மன்னர் அவளைக் கண்டித்திருக்க வேண்டும். ஆனால், அப்படிச் செய்யவில்லை.

இவை துருவனை கோபங்கொள்ளச் செய்தது. உடனே அவன் தன் அன்னையிடம் விரைந்து சென்று, நடந்ததைச் சொல்லி அழுதான். ஆனால், அவன் தாய் கண்ணீர் வடித்துக் கொண்டே மௌனம் சாதித்தாள். பிறகு கண்ணீரைத் துடைத்துக் கொண்டே துருவனிடம், ''குழந்தாய்!

புராணங்களின் இள நாயகன் - 8

பாவியான என் வயிற்றில் பிறந்ததனால் உனக்கு இவ்வாறெல்லாம் அவமானப்பட நேரிடுகிறது. அந்தக் கடவுளைத் தவிர நமக்கு உதவி செய்ய யாருமில்லை. அதனால் அவரிடம் உன் குறைகளைச் சொல்லி முறையிடு!'' என்றாள். உடனே துருவன், ''தாயே! அப்படியானால் நான் உடனே தவம் செய்யப் புறப்படுகிறேன். என்னை ஆசீர்வதியுங்கள்!'' என்றான்.

''என் வயிற்றில் பிறந்து நீ பட்ட துன்பங்கள் போதும்! உன் சிற்றன்னையின் வயிற்றில் பிறக்க வேண்டும் என்று தவம் செய்!'' என்றாள் சுநீதி. ''தாயே! உன்னுடைய மணிவயிற்றில் பிறந்ததற்காக நான் பெருமைப் படுகிறேன். துருவனைப் பெற்ற நீ எத்தனை பாக்கியசாலி என்று உலகமே புகழும்படி சாதனை புரிவேன்'' என்று சபதமிட்டு துருவன் சென்றான்.

வழியில் நாரதர் எதிர்ப்பட்டார். ஐந்து வயது பாலகனான துருவன் தான் தவம் செய்யப் போவதாகக் கூறியதைக் கேட்டு வியந்த அவர் ''குழந்தாய்! மதுவனம் சென்று பகவான் மகாவிஷ்ணுவை தியானித்து, 'ஓம் நாராயணாய நம' என்று ஜெபம் செய்! உன்னுடைய இலட்சியம் நிறைவேறும்!'' என்றார்.

பிறகு மேற்கொண்டு செல்லுகையில் சப்தரிஷிகளை சந்தித்த துருவன் அவர்களை வணங்கி, அவர்களுடைய ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொண்டு மதுவனத்தை அடைந்து தவம் செய்ய அமர்ந்தான்.

துருவனின் தவத்தைக் கண்டு தேவலோகமே வியந்தது. இந்திரன் துருவனின் தீவிரத் தவத்தைக் கலைக்க முயன்றான். ஆனால், அவனுடைய முயற்சிகள் பலிக்கவில்லை.





துருவனின் தவத்தினால் மகிழ்சி உற்ற விஷ்ணு அவன் முன் தோன்றி, ''குழந்தாய்! என்ன வரம் வேண்டுமோ, கேள்!'' என்றார். ஏதேதோ கேட்க நினைத்த துருவன் விஷ்ணு வின் தரிசனத்தினால் மெய் மறந்து போய், ''பெருமாளே! வண்டு எவ்வாறு மலரைச் சுற்றிச் சுற்றி வருகிறதோ, அதுபோல் தாமரை போன்று மலர்ந்த உன் திருமுகத்தை நான் எப்போதும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்'' என்றான். அதற்கு விஷ்ணு, ''அப்படியே ஆகட்டும்! முதலில் நீ வீட்டுக்குச் செல்! பெரிய வனாகி, ஆட்சிபுரிந்து உன் கடமை களை எல்லாம் நிறைவேற்று, அதன் பிறகு உச்சிவானில் நீ ஒரு நட்சத்திரமாக மிளிர்வாய்! அங்கிருந்த படியே என்றென்றும் என்னைப் பார்த்துக் கொண்டேயிரு. அதனால் மிக அதிக ஒளி உடன் நீ பிரகாசிப்பாய்'' என்று கூறி மறைந்தார்.

மிகுந்த மகிழ்ச்சியுடன் வீடு திரும்பிய துருவன், தன் அன்னை யிடம் நடந்த விஷயங்களைக் கூறி அவளையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினான். காலம் கடந்தபின் பெரியவனாகி, சிம்மாசனத்தில் அமர் ந்து ஆட்சி புரிந்தான்.

ஒருமுறை வேட்டையாடச் சென்ற சிற்றன்னையின் புதல்வன் உத்தமனை சில யட்சர்கள் கொன்று விட்டனர். தன் புதல்வனின் சாவைப் பொறுக்க முடியாத சுருசி தீயில் பாய்ந்து உயிரை நீத்தாள். கோபங்கொண்ட துருவன் யட்சர்கள் வாழ்ந்து வந்த அல்கா நகரத்தை தன் படைகளுடன் சூழ்ந்து கொண்டு அவர்களுடன் போர்

புரிந்தான். அப்போது யட்சர்களின் தலைவனான குபேரன் நேரில் வந்து அவர்கள் செய்த தவறுக்காகத் தான் மன்னிப்புக் கேட்க, துருவனும் போரை விட்டு விட்டான்.

மிகவும் நீதியுடனும், நேர்மையுடனும் ஆட்சிபுரிந்த துருவன், மனு வமிசத்தின் புகழை மேன்மேலும் சிறக்கச் செய்தான். உரிய வயதில் மணம் புரிந்த அவன் நற்குணமும், வீரமும் பொருந்திய பிள்ளைகள் பலரைப் பெற்றான். பல ஆண்டுகள் ஆட்சி புரிந்த பின், அவன் தன் மூத்த மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, நாட்டை விட்டு விலகி பத்ரிவனம் புகுந்தான். அங்கு பல ஆண்டுகள் இடைவிடாமல் மகாவிஷ்ணுவை தியானம் செய்த தன் பலனாக, அவனுடைய உடல் தங்கமாக மாறியது. அவனை துருவ மண்டலத்திற்கு அழைத்துச் செல்ல விஷ்ணுவின் சேவகர்கள் வந்தனர்.

அவர்களிடம், ''என் உயிரின் ஒரு பகுதியான என் தாயை விட்டு நான் மட்டும் சொர்க்கம் செல்ல மாட்டேன்'' என்றும் கூற, அவர்கள் ஏற்கெனவே ஒரு விமானத்தில் துருவ மண்டலத்தில் பயணம் செய்தவாறு செல்லும் அவன் தாய் சுநீதியைக் காட்டினர். அதைப் பார்த்ததும் தானும் துருவ மண்டலம் செல்ல துருவன் சம்மதித்தான். அங்கு சென்றதும் துருவன் தன் பூத உடலை விட்டு ஒளி வீசும் துருவ நட்சத்திரமாக மாறினான்.

லட்சியத்தை அடைய வேண்டும் என்றால் அதற்கு கடும் முயற்சி தேவை! காரிருள் சூழ்ந்திருக்கும் ஓரிடத்தில், ஒரு சிறு விளக்கு ஏற்பட்டால், இருள் அகல்வது போல், நமது முயற்சிகளால் எதிர்கொள்ளும் இருள் போன்ற இன்னல்களை விலக்கலாம். இதைத்தான் துருவன் தன் வரலாற்றினால் விளக்குகிறான். சந்திரன் இல்லாத இரவுகளில் வான மண்டலமே இருளில் மூழ்கி இருந்தாலும், வான மண்டலத்தை ஒளிரச் செய்யும் துருவ நட்சத்திரத்தைப் பார்த்து துருவனை நம் மனத்தில் நினைவு கூர்ந்து, அவனை வழிகாட்டியாகக் கருதுவோம்.






## வரவேற்பும், பிரிவுபசாரமும்



மும்பையிலுள்ள 'கேட்வே ஆஃப் இந்தியா' பிரிட்டிஷாரின் வரவேற்பு, பிரிவுபசாரம் இரண்டையும் குறிக்கும் நினைவுச்சின்னமாகத் திகழ்கிறது. 1911ஆம் ஆண்டில், ஐந்தாம் ஜார்ஜ் மன்னரும், ராணி மேரியும் கப்பலில் இந்தியாவுக்கு வந்தபோது அவர்கள் முதலில் மும்பையில்தான் வந்திறங்கினர். அவர்களுக்கு பிரமாதமான வரவேற்பு அளிக்கும் விதத்தில் இந்த வளைவு கட்டப்பட்டது. முப்பத்தேழு ஆண்டுகளுக்குப் பிறகு, இதே வளைவின் வழியாக சாமர்செட் லைட் இன்ஃபென்ட்ரி இந்தியாவை விட்டு வெளியேறி, கப்பலேறி இங்கிலாந்து நோக்கிச் சென்றனர்.

## சூரியனுக்குக் கோயில்

தமிழகத்தில் கும்பகோணம் அருகிலுள்ள சூரியனார் கோயில், தென்னாட்டில் சூரியனுக்காகப் பிரத்யேகமாகக் கட்டப்பட்ட ஒரேயொரு கோயிலாகும்.

சோழ மன்னரான குலோத்துங்கச் சோழன் (1075 - 1120) இதை உருவாக்கினதாகச் சொல்லப்படுகிறது. இக்கோயிலுள்ள கல்வெட்டுகள் இதை குலோத்துங்கச் சோழ மார்த்தாண்ட ஆலயம் என்று குறிப்பிடுகின்றன. கருவறையில் சூரிய நாராயண சுவாமி ஏழு குதிரைகள் பூட்டிய இரதத்தில் பயணிப்பது போல் அமைந்து உள்ளது. கன்னோஜ் ராஜ்யத்தை ஆண்டு வந்த கஹத்வால் வம்சத்து மன்னர்களுடன் சோழர்கள் நட்புறவு பாராட்டி வந்தனர். அந்த வம்சத்து (1090 - 1104) மன்னர்கள் சூரியனை வழிபடுபவர்கள்! அவர்களின் நட்பின் அடையாளமாக சோழ மன்னர் இதை கட்டினதாகச் சொல்லப்படுகிறது. மூன்றடுக்கு கோபுரம் கொண்ட இக்கோயிலின் உயரம் சுமார் 16 மீட்டர்!





# முத்திரை மோதிரத்தின் மகிமை



அக்பரின் தர்பாரில் இருந்தவர்களில், பீர்பல் அக்பருக்கு மிகவும் நெருக்க மானவர். பீர்பலுடைய அறிவும், நகைச்சுவையும் அக்பரைப் பெரிதும் கவர்ந்திருந்தன. பல சமயங்களில் தன்னுடைய நகைச்சுவைத் துணுக்கு களினால் அக்பரைக் குலுங்கக் குலுங்க சிரிக்க வைப்பதில் மிகவும் வல்லவர் பீர்பல்! வழக்கப்படி அவர் ஒருநாள் அக்பரை சிரிக்க வைத்த போது, வாய்விட்டு சிரித்த அக்பர் பீர்பலைப் பார்த்து, ''நீ சக்திவாய்ந்த வனாக இருப்பதன் காரணம் உன் மதியூகமும், நகைச்சுவை உணர்வுமே!'' என்று விமரிசித்தார்.

''பிரபு! அதுதான் உங்களுக்கும், எனக்குமுள்ள வித்தியாசம்! நீங்கள் ஒரு சக்ரவர்த்தியின் பிள்ளை என்ற ஒரே காரணத்தினால் எந்த சாதனையும் புரியாமல் சக்ரவர்த்தி ஆகிவிட்டீர்கள். ஆற்றல் மிக்கவராக இருக்கிறீர்கள். ஆனால், என்னுடைய பெருமைக்கும், பெயருக்கும் காரணம் திறமை மட்டுமே! உங்களைப் போல் பிறப்பினால் அடையவில்லை. உழைத்துப் பெற்றவன் நான்!'' என்று பெருமை பேச அக்பருக்கு இலேசாகக் கோபம் வந்தது. ''என்ன உளறுகிறாய்?'' என்று கேட்டார் அக்பர்.

''சரியாகத்தான் சொல்கிறேன். என் மூளையை யாரும் என்னிடம் இருந்து திருட முடியாது? அதனால் என் சக்தியும், பெருமையும் என்றென்றும் இருக்கும். ஆனால், உங்கள் மகுடமும், முத்திரை மோதிரமும் உங்களிடம் இருக்கும் வரைதான் உங்களுக்கு சக்தி உண்டு. அவற்றைப் பறித்து விட்டால் நீங்கள் செல்லாக் காசு! உங்களுக்கு மதிப்பே கிடையாது'' என்றார் பீர்பல்.

சினம் தலைக்கேறிய அக்பர், ''நீ சொல்வதை நிரூபித்துக் காட்டு! இல்லை என்றால் உனக்கு மரண தண்டனை!'' என்று பீர்பலைப் பார்த்து சீறினார்.

அன்றிரவு பீர்பல் படுக்கையில் படுத்தவாறே அக்பரின் சவாலை சமாளிப்பது எப்படியென்று சிந்தனை செய்தார். கடைசியில் அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. அடுத்த நாள்

வழக்கப்படி பீர்பல் தர்பாருக்கு வந்தார். அக்பர் வழக்கப்படி பீர்பலுடன் பேசினாலும், அன்று அவர் இயல்பான பிரியத்துடன் பேசவில்லை. தான் நேற்று கூறியது அவருடைய மனத்தை பாதித்து இருக்கிறது என்று பீர்பல் உணர்ந்து கொண்டார்.

இரண்டு வாரங்கள் சென்றன. வாரத்திற்கு ஒருமுறை அக்பர் இரவு நேரத்தில் மாறுவேடமணிந்து தனியாக நகர்வலம் வருவது வழக்கம்! நாட்டில் சட்டம் ஒழுங்கு எப்படி இருக்கிறது. மக்கள் மனநிறைவுடன் இருக்கின்றனரா என்றெல்லாம் நேரில் கண்டறியவே அவர் அவ்வாறு செய்வார்.

மாறுவேடமணிந்து செல்லும் போது, அக்பரை யாராலும் அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. அந்த அளவுக்கு அஷ்ரப் எனும் ஒப்பனைக் கலைஞர் மிக அழகாக வேடம் அணிவிப்பார். அஷ்ரப்பும், பீர்பலும் நண்பர்கள்.

ஒவ்வொரு முறை அக்பருக்குப் புதிய வேடம் அணிவிக்கும்போது அஷ்ரப் பீர்பலைக் கலந்து ஆலோசிப்பார். இந்த வாரத்தில் இந்த மாறுவேடம் அணியப்போகிறார் என்பதை பீர்பல் முன்கூட்டியே ஊகித்து விடுவார். அக்பருக்கு எப்படி ஒப்பனை செய்தால் சிறப்பாக இருக்கும் என்ற உத்திகள் பீர்பலுக்கு நன்றாகத் தெரியும். அவற்றை அவர் அஷ்ரப்புக்குச் சொல்லிக் கொடுப்பார்.

ஒருநாள் மாலை அஷ்ரப் பீர்பலைத் தேடி வந்தார். ''இன்றிரவு அக்பர் மாறுவேடம் அணியப் போகிறார். அவருக்குப் பிச்சைக்காரர் வேடம் போட்டு விடலாமா?'' என்று பீர்பலைக் கேட்டார்.

''தாராளமாகச் செய்! சக்ரவர்த்தியையை பிச்சைக்காரனாக்கும் சக்தி உனக்குத்தான் உண்டு'' என்ற பீர்பல் தொடர்ந்து, ''அவருக்கு ஒட்டுப் போட்ட சட்டையும், பைஜாமாவும் அணிவிப்பாய். பழைய, கிழிந்த துணியினால் தலைப்பாகை செய்! தேய்ந்து போன செருப்புகளைக் கொடு. முகத்திலும், கழுத்திலும், கைகளிலும் கறுப்பு வண்ணக் கோடுகள் போட்டு, சாயம்பூசி சுருங்கிய தோலும், வெயில்பட்டுக் கன்றிய முகமுமாக இருப்பதுபோல் செய்!'' என்றார்.

அஷ்ரப் பீர்பல் கூறிய அனைத்தையும் கவனமாகக் கேட்டுக் கொண்ட பின் அங்கிருந்து அகன்றார்.

''நான் நினைப்பது நடக்கும் என்று



# நம் இந்தியா



**இந்த இதழில் தோன்றும் கேள்விகள் இலக்கியத்துடன் தொடர்பு கொண்டவை.**

1. பகவத் கீதையின் உட்கருத்துகளை விளக்குமாறு எழுதப்பட்ட 'கீத ரஹஸ்யா' எனும் நூலை இயற்றியவர் யார்? இவர் 20ஆம் நூற்றாண்டில் இருந்த ஒரு தேசியத் தலைவர்.
2. மைதிலி சரண் குப்தாவின் மிகப் புகழ் பெற்ற படைப்பு எது?
3. ஞானபீட் விருதை முதன் முதலாகப் பெற்றவர் யார்?
4. பஞ்சதந்திரக் கதைகளை இயற்றியவர் யார்? எப்போது?
5. 'சகாராம் பைண்டர்', காசிராம் கோட்வால்' ஆகிய மராத்திய நாடகங்களை இயற்றியவர் யார்?
6. இந்தியாவின் புகழ்பெற்ற கிரிக்கெட் பந்து வீச்சாளரான பிரசன்னா எழுதிய அவருடைய சுயசரிதத்தின் பெயர் என்ன?
7. இரவீந்திரநாத் எந்தக் கவிதைத் தொகுப்புக்காக நோபல் பரிசு பெற்றார்? எந்த ஆண்டில்?
8. அக்பரின் தர்பாரில் இருந்த ஒருவர் 'அக்பர்நாமா'வை இயற்றியுள்ளார். அவர் யார்?
9. 'சாரே ஜஹான் சே அச்சா' என்ற தேசபக்திப் பாடலை இயற்றியவர் யார்? **(விடைகள் 48ஆம் பக்கம்)**

தோன்றுகிறது'' என்று பீர்பல் புன்னகைத்தார். பிறகு தன் மனைவியை அழைத்துத் தனக்கும் பிச்சைக்காரன் வேடம் அணிவிக்க வேண்டினார்.

''இந்த நேரத்தில் உங்களுக்கு எதற்குப் பிச்சைக்காரன் வேடம்?'' என்று அவள் கேட்டாள்.

''ஊர் முழுவதும் சுற்றி பிச்சை எடுக்கப் போகிறேன். அப்போதுதான் பிச்சைக்காரர்களின் வாழ்க்கை எத்தனை கஷ்டமானது என்று உணர முடியும்'' என்றார் பீர்பல்.

''நீங்களும், உங்கள் யோசனையும்!'' என்று அவள் ஏளனமாகப் பேசினாலும், பீர்பலுக்குப் பிச்சைக்காரன் வேடம் போட்டுவிட மும்முரமாக முயன்றாள். பழைய, ஒட்டுப் போட்ட துணிகளைத் தேர்ந்தெடுத்து அணிவித்தாள். பழைய, பிய்ந்து போன செருப்புகளை அணிவித்தப்பின், முகத்திலும், கழுத்திலும் சாயங்கள் பூசி அசல் பிச்சைக்காரனைப் போல் தோற்றமளிக்குமாறு செய்தாள். வேடம் நன்றாகப் பொருந்தி இருக்கிறது என்று திருப்தி அடைந்தபின் அவரை அனுப்பி வைத்தாள்.

வீட்டை விட்டுப் பிச்சைக்காரன் வேடத்தில் வெளியேறிய பீர்பல் நேராக அரண்மனையை நோக்கி நடந்தார். அரண்மனை வாயிலில் இருந்து ஒதுங்கி ஒரு மறைவான இடத்தில் நின்று கொண்டு காத்து இருந்தார். சிறிது நேரத்தில் அரண்மனை வாயிற்கதவுகள் திறக்க ஒரு பிச்சைக்காரன் வெளியே வந்தான். அவனை காவலர்கள் வணங்கினர்.

'பிச்சைக்காரன் உண்மையில் யார் என்று இவர்களேக் காட்டிக் கொடுத்து விட்டனர்' என்று எண்ணிய பீர்பல் ''ஏய், பிச்சைக்காரா? உன்னுடன் நானும் சேர்ந்து கொள்ளட்டுமா?'' என்று கேட்டார்.

''யாரடா நீ?'' என்று குரலில் அதிகாரம் தொனிக்க பிச்சைக்காரன் வேடத்திலிருந்த அக்பர் பீர்பலைப் பார்த்துக் கேட்டார்.

''நானும் உன்னைப் போல் பிச்சைக்காரன்தான்'' என்று பீர்பல் சொல்ல, ''நான் பிக்சைக்காரன் இல்லை'' என்று அக்பர் மறுத்தார்.

''பின்னே என்ன, நீ சக்ரவர்த்தியா?'' என்று பீர்பல் வேண்டும் என்றே விஷமமாகக் கேட்க, ''ஆம்! நான் அக்பர்! மாறுவேடத்தில் இருக்கிறேன்'' என்றார் அக்பர்.

''யாரிடம் கதை விடுகிறாய்? அக்பர் நீதான் என்றால் உன் முத்திரை மோதிரம் எங்கே?'' என்று பீர்பல் வம்பு செய்தார்.

''என்னிடம் முத்திரை மோதிரம் இருக்கிறது. ஆனால், அதை உன்னிடம் நான் ஏன் காட்ட வேண்டும்?'' என்று அக்பர் கேட்டார்.

''இல்லையானால் நீ சொல்வதை எப்படி நம்புவது? நானும் உன்னைப் போல் பிச்சைக்காரன்! அந்த உரிமை யில் கேட்கிறேன்'' என்றார் பீர்பல்.

''சந்தேகமிருந்தால் இதோ பார்!'' என்று முத்திரை மோதிரத்தை தன் விரலில் இருந்து கழற்றி அக்பர் காட்டினார்.

''அது உண்மையா இல்லை



போலியா? கொடு, பார்க்கலாம்'' என்று அதை சோதிப்பவர் போல் பீர்பல் அக்பரிடமிருந்து மோதிரத்தை வாங்கிக் கொண்டார்.

''அட! நிஜமாகவே இது சக்ரவர்த்தியின் முத்திரை மோதிரம்தான்! ஆனால், இது உனக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று பீர்பல் ஆச்சரிய ப்படுபவர் போல் நடித்தார். ''முட்டாளே! நான்தான் அக்பர் என்று சொல்கிறேனே! என்னிடமில்லாமல் வேறு யாரிடம் இது இருக்கும்?'' என்று அக்பர் சீறிவிழ, இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட, அங்கு சில காவல் வீரர்கள் வந்தனர்.

''இவனைப் பிடித்துச் செல்லுங்கள்! இவன் ஒரு திருடன்!'' என்று

பீர்பல் கூச்சலிட அவர்கள் அக்பரைப் பிடிக்க வர, ''முட்டாள்களா! நான் தான் சக்ரவர்த்தி!'' என்று அக்பர் கூச்சலிட்டார்.

''அவன் பொய் சொல்கிறான். நான் தான் சக்ரவர்த்தி!'' என்று சொல்லி பீர்பல் முத்திரை மோதிரத்தைக் காட்ட, அவர்கள் அக்பரைக் கைது செய்ய முயன்றனர். ''சரி சரி! அவனை விட்டு விடுங்கள்'' என்று பீர்பல் கூற அவர்கள் பீர்பலுக்கு சலாம் செய்துவிட்டுச் சென்றனர்.

மறுநாள் அரண்மனையில் அக்பரைத் தனியாக சந்தித்த பீர்பல், ''பிரபு! நேற்று உங்கள் மோதிரத்தைத் தொலைத்து விட்டீர்களா?'' என்று கேட்க, அக்பர் 'ஆம்' என்று தலை அசைத்தார்.

''இதோ, உங்களுடைய மோதிரம்!''



என்று பீர்பல் மோதிரத்தை அக்பரிடம் கொடுத்தார். உடனே நேற்றிரவு தான் மாறுவேடத்திலிருந்த போது தன்னுடன் தகராறு செய்து அவமானப்படுத்தியது பீர்பல்தான் என்று தெரியவர, அக்பர் கோபத்தில் துடித்தார்.

உடனே பீர்பல், ''பிரபு! தயவு செய்து கோபப்படாதீர்கள்! உங்களை அவமானப்படுத்துவது என் நோக்க மல்ல! சில நாள்களுக்கு முன் நமக்குள் நடந்த விவாதம் நினைவிருக்கிறதா? என்னுடைய பெருமை, கௌரவம் ஆகியவை என் திறமையினால் பெற்றவை என்றும், உங்களிடம் அதிகாரச் சின்னங்களான மகுடமும், மோதிரமும் இருக்கும் வரைதான் உங்கள் அதிகாரம் செல்லுமென்றும் கூறினேன். அதை நீங்கள் நிரூபித்துக் காட்டச் சொன்னீர்கள், அதைத்தான் நான் நேற்று நிரூபித்துக் காட்டினேன். உங்களிடம் உள்ள முத்திரை மோதிரத் திற்குள்ள சக்தி உங்களுக்கில்லை என்று காட்டி விட்டேன்'' என்றார்.

ஒரு கணம் கோபத்தில் துடித்தாலும், மறுகணமே அக்பருடைய கோபம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

பலமாக சிரித்த அக்பர், ''போக்கிரிப் பயலே! சாமார்த்தியமாக என்னை மடக்கி விட்டாயா? உன்னுடன் சவாலிட்டு ஜெயிக்க முடியுமா? நீ அதிபுத்திசாலி ஆயிற்றே!'' என்று புகழ்ந்தவர், பீர்பலுக்கு பொற்காசுகள் நிரம்பிய ஒரு பட்டுப் பையை பரிசளித்தார்.

வளரும் நட்சத்திரம்

# நிமிஷா மோகன்



- நிமிஷா மோகன் ரோஜர் ஃபெடரரைத் தனது ரோல் மாடலாகக் கொண்டுள்ளார்.
- காலை மற்றும் மாலையில் 3 மணி நேர டென்னிஸ் மற்றும் உடற்பயிற்சி செய்கிறார்.
- 'டென்னிஸ் அட்வான்டேஜ்' என்ற பெங்களூர் பயிற்சி நிறுவனத்தில் பயிற்சி பெறுகிறார்.
- தியான உத்தப்பா இவரது பயிற்சியாளர்!
- அவருடைய நட்பு பாராட்ட விரும்பினால், தயிர் சாதத்தைத் அளிக்காதீர்கள்!



## வெற்றி பெற்ற போட்டிகள்

- AITA சூப்பர்சீரிஸ் (U-14, சிங்கிள்ஸ்) - 2005
- ஆல் இந்தியா சூப்பர்சீரிஸ் (U-16, சிங்கிள்ஸ்) - 2006
- AITA டேலன்ட் சீரிஸ் (U-18, சிங்கிள்ஸ் மற்றும் டபுள்ஸ்) - 2008
- VSTA லெவல் 1B சாம்பியன்ஷிப், நியூயார்க், USA (U-18, சிங்கிள்ஸ்) - 2008
- ITF ஜூனியர் (GR-5) சென்னை மற்றும் ஹைதராபாத் - 2008
- DSCL நேஷனல் டென்னிஸ் சாம்பியன்ஷிப் (U-18, சிங்கிள்ஸ்) - 2008

வயது பதினேழு! ஆனால், இதுவரை டென்னிஸ் விளையாட்டில் அவர் பெற்று உள்ள விருதுகளோ பதினைந்து! இதில் இரண்டு விருதுகள் அகில உலகப் போட்டிகளில் வென்றவை. தன் தாய் அளித்த ஊக்கத்தினால் தனதுப் பத்தாவது வயதிலேயே டென்னிஸ் விளையாடத் தொடங்கி விட்டார். தற்போது பகவான் மகாவீர் ஜெயின் காலேஜில் (பெங்களூரில்) படித்து வரும் நிமிஷா காலைவேளையில் பயிற்சி பெறுவதால், வகுப்புகளுக்கு தாமதமாகச் செல்ல விசேஷ அனுமதி பெற்றிருக்கிறார். இவர் படிப்பிலும் முழுக்கவனம் செலுத்துகிறார்.

மற்ற இளைய சமுதாயத்தினரைப் போல் துரித உணவுகளை உண்டு தன் உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்ளாமல், சத்துணவாகச் சாப்பிடுகிறார். டென்னிஸ் பயிற்சிக்குப் பிறகு, 45 நிமிடம் உடற்பயிற்சி செய்கிறார். டென்னிஸ் விளையாடத் தேவையான உடற்கட்டையும், ஆற்றலையும் பெற எல்லாவித முயற்சிகளையும் எடுத்துக் கொள்கிறார்.

இதுவரை விளையாடிய போட்டிகளில் மிகக் கடினமானது எது என்ற கேள்விக்குத் தான் பங்கேற்கும் ஒவ்வொரு போட்டியையும் கடினமானது என்று நினைத்து அதற்காக தான் பெரும் முயற்சி எடுப்பதாகக் கூறுகிறார்.

தற்போதைய இளைய சமுதாயத்தினரின் தாரக மந்திரமான ''தன்னம்பிக்கையுடன் வெற்றி அடைய பாடுபடு!'' என்பதை தான் நம்புவதாகக் கூறுகிறார்.

# அது அவரவர் அபிப்பிராயம்

**ச**தானந்தர் என்ற யோகி ராமாபுரம் கிராமத்தில் தங்கியிருந்தபோது, அவரை தரிசிப்பதற்காக மாணிக்கம் பக்கத்து கிராமத்திலிருந்து வந்தான். அப்போது அவருடைய இருப்பிடத்திற்கு அருகேயிருந்த ஓர் அரச மரத்தினடியில், ராமாபுரத்துப் பணக்கார ஜமீன்தார் உட்கார்ந்திருக்க, கிராம மக்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர். சாமியாரை தரிசிக்க வந்திருந்தவர்களைப் பார்த்து ஜமீன்தார், ''இந்த சாது சன்னியாசிகளை தரிசிப்பதற்காக ஏன் இப்படிக் கூட்டமாக வருகிறீர்கள்? இவர் சொல்லித்தான் நமக்கு பக்தி வரவேண்டுமா? இவர் அப்படியென்ன உபதேசம் செய்யப் போகிறார்? ஆசையை விட்டுவிடு என்றும், நேர்மையாக நடந்துகொள் என்றும் கதையளக்கிறார். இது நமக்கே தெரியாதா? இவரிடம் சென்றால் நமது பணமும், நேரமும் விரயமாகும்'' என்றார்.

அவர் சொல்வது எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டபின் கிராமத்தினர் பூ, பழங்களுடன் யோகியை தரிசிக்கச் சென்றனர். அவர்களைத் தடுத்து நிறுத்திய மாணிக்கம், ''ஜமீன்தார் உங்களுக்கு புத்திமதி கூறியும் ஏன் நீங்கள் அதை கேட்காமல் யோகியைப் பார்க்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு அவர்கள், ''நீ இந்த கிராமத்திற்குப் புதியவன்! உனக்கு அவரைப் பற்றி தெரியாது. இதுவரை அவர் தெரிவித்தது அவருடைய அபிப்பிராயம்! நாங்கள் எங்களுடைய அபிப்பிராயத்தின்படி நடக்கிறோம்'' என்றனர்.

அப்போதுதான் மாணிக்கத்திற்கு ஜமீன்தார் எப்படிப்பட்டவர் என்றும், அவருடைய அபிப்பிராயத்திற்கு மற்றவர்கள் எத்தனை மதிப்புத் தருகின்றனர் என்றும் விளக்கியது.

**- செந்தில் குமார்**



# குதுப் மினார்




குதுப் கட்டட வளாகத்தினுள் குதுப் மினாரும் அமைந்துள்ளது. அடிமை வம்சத்தின் முதல் ஆட்சியாளரான குதபுதீன் ஐபக் என்பவர் குதுப் மினாரைக் கட்டத் தொடங்கினார். அவருக்குப்பின் இல்துமிஷ், அலாவுதீன் கில்ஜி ஆகியோர் மேலும் பல அடுக்குகளைக் கட்டி தற்போது அதன் உயரம் 72.5 மீட்டர். அடித்தளத்தில் 14.3 மீட்டர் அகலமும், மேற்தளத்தில் 2.7 மீட்டர் அகலமும் கொண்டது.

அதன் பிரதான வாயிலுக்கு 'அலை கேட்' என்று பெயர். இது அலாவுதீன் கில்ஜியால் கட்டப்பட்டது. சிவப்புக் கற்களாலும், பளிங்கினாலும் துருக்கிய சிற்பிகளால் மிக அழகான முறையில் இது உருவாக்கப்பட்டுள்ளது.

அலாவுதீன் கில்ஜி குதுப் மினாரை விட இரண்டு மடங்கு அதிக உயரமாக 'அலைமினார்' என்ற கட்டடத்தை எழுப்ப விரும்பினார். கட்டட வேலையும் தொடங்கப்பட்டது. ஆனால், அவர் இறந்தபிறகு அது முடங்கிவிட்டது. 24.5 மீட்டர் உயரமுள்ள அலைமினார் இன்று பாழடைந்து காணப்படுகிறது.

குதுப் வளாகத்திலுள்ள இரும்புத் தூண் உலக அதிசயங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. 98 சதவீதம் இரும்பினால் செய்யப்பட்ட இந்தத் தூண் 1,600 ஆண்டுகளுக்குப் பிறகும் துருப்பிடிக்காமல் காணப்படுகிறது. இரண்டாம் சந்திர குப்தர் (375 - 414 கி.மு) எழுப்பிய இந்தத் தூண் 7 மீட்டர் உயரம் கொண்டது. இதன் மேல் முதுகு படியும்படி சாய்ந்து நின்று கொண்டு கைகளைப் பின்புறம் நீட்டி, தூணைச் சுற்றி வளைத்து பிடித்துக் கொள்ள முடிந்தவருடைய விருப்பம் நிறைவேறும் என்று ஒரு நம்பிக்கை நிலவுகிறது.

யுனெஸ்கோ நிறுவனம் 1993ஆம் ஆண்டில் குதுப் வளாகத்தை உலகப் பாரம்பரியச் சின்னங்களில் ஒன்றாக அறிவித்தது. இந்திய இஸ்லாமிய சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதாக இதைப் பற்றிக் குறிப்பிட்டது.

காலை முதல் மாலை வரை குதுப் வளாகத்தை உல்லாசப் பயணிகள் பார்வையிடலாம். இந்தியர்களுக்கும், சார்க் நாடுகளைச் சேர்ந்தவர்களுக்கும் தலா 10 ரூபாய், மற்ற நாடுகளைச் சேர்ந்தவர்களுக்குத் தலா 5 யுஎஸ் டாலரும் நுழைவுக் கட்டணமாக வசூலிக்கப்படுகிறது. 15 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு அனுமதி இலவசம்.

# கரையில் சிக்கிய திமிங்கலம்

இந்த நிகழ்ச்சியை நான் என் நண்பர்களுடன் பகிர்ந்து கொள்ள மிகவும் விரும்புகிறேன். அவர்கள் இந்த நாட்டின் எந்த மூலையில் இருந்தாலும் இதைப் படித்துப் பார்த்து ரசிக்கட்டும்.

என் பெயர் சுனி! கர்நாடக மாநிலத்தின் மேற்கு கடற்கரையோர கிராமமான காகலில் வசித்து வருபவள்! பள்ளியில் படிக்கும் 12 வயது சிறுமி! இயந்திர கதியில் சென்று கொண்டிருந்த என் பள்ளி வாழ்க்கை ஒரு நாள் இரண்டு பெண்மணிகள் எங்கள் பள்ளியில் இயற்கை அறிவியல் சங்கம் தொடங்கியது முதல் சுவாரஸ்யமாக மாறியது. சங்கத்தில் சேர்ந்த நான் அதன் செயற்பாடுகளில் முழு மனத்துடன் ஈடுபட்டேன். அதில் எனக்கு அளவற்ற உற்சாகமும் ஏற்பட்டது.

சென்ற டிசம்பர் மாதம், எங்கள் சங்கத்தின் கேம்ப் கிராமத்துக் கடற்கரையில் நடைபெற்றது. எங்களுடைய தேர்வுகள் முடிந்துவிட்ட மகிழ்ச்சியில் நாங்கள் உற்சாகத்துடன் கேம்ப் கொண்டாட்டங்களில் ஈடுபட்டு இருந்தபோது, தொலைவில் கடற்கரையில் மீனவர்கள் கூட்டமாகக் கூடி எதையே வேடிக்கைப் பார்த்துக் கொண்டு இருந்தனர். உடனே நாங்களும் அங்கே ஓடிச்சென்றோம். அங்கே நாங்கள் கண்ட காட்சி எங்களை திக்குமுக்காடச் செய்தது. அங்கு ஒரு மிகப்பெரிய திமிங்கலம் படுத்திருந்தது. அது உயிருடனிருந்தது என்பது அது மூச்சு விட்டுக் கொண்டு இருந்ததில் இருந்தே தெரிய வந்தது.

''ஆ! திமிங்கலம்!'' என்று என் கூட வந்தவர்கள் கத்தினார்கள். எல்லாரையும் தள்ளிக் கொண்டு நான் முன்னே சென்று திமிங்கலத்தை அருகில் இருந்து பார்த்தேன். அதனுடைய அளவிற்கு சரியாக நின்று கொண்டு இருந்த ஆட்கள் மட்டும் 36 பேர் இருந்ததால், அது 50 அடிக்கும் மேல் நீளமானது என்று அறிந்தேன். கரை ஓரமாக ஆழமில்லாத கடற்பகுதிக்கு அது தெரியாமல் வந்திருக்க வேண்டும் என்றும், நீந்த முடியாமல் திணறிய அதை கடலின் அலைகள் கரைக்கு ஒதுக்கியிருக்க வேண்டுமென்றும் அருகில் இருந்தவர்கள் பேசிக் கொண்டனர். ஆனால், இப்போது பிரச்சினை என்னவெனில் அத்தனை பெரிய திமிங்கலத்தை திரும்பிக்



கடலுக்குள் தள்ளுவது எப்படி என்பதுதான். சில இளைஞர்கள் அதன்மீது தண்ணீரை ஊற்றிக் கொண்டிருந்தனர். திமிங்கலத்தின் உடலை எப்போதும் ஈரமாக வைத்திருக்க வேண்டுமென்பதற்காகவே அவர்கள் அவ்வாறு செய்கின்றனர் என்று எங்கள் சங்கத்தலைவியான லட்சுமி அக்கா விளக்கினாள்.

ஏற்கெனவே, அங்கு கூடியிருந்த மீனவர்கள் திமிங்கலத்தின் உடலில் பெரிய தாம்புக் கயிற்றினைக் கட்டி அதைக் கடலுக்குள் இழுக்க முயற்சி செய்து கொண்டிருந்தனர். அந்த மீனவர்கள் மிகவும் பலசாலிகள். கரையிலிருந்து படகுகளை அவர்கள் தனியாகவே இழுத்துக் கடலுக்குள் தள்ளி விடுவார்கள். ஆனால், திமிங்கலத்தை அவ்வளவு எளிதாக இழுக்க முடியுமா? மக்கள் கூட்டம் சேர்ந்து கயிற்றை இழுத்தப் போதிலும் திமிங்கலம் அசையவில்லை.

சில மணி நேரங்கள் முயன்றும் திமிங்கலத்தை ஒரு அங்குலம் கூட அசைக்க முடியாததால், மக்கள் நம்பிக்கையிழக்கத் தொடங்கினர். திமிங்கலத்தைக் காப்பாற்ற முடியாது என்று எண்ணினர். மீன்வளத்துறையிலிருந்து வந்த சில அதிகாரிகள் திமிங்கலத்தின் உடல் அளவுகளைக் குறித்துக் கொண்டனர். அதற்குமேல் அவர்களாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை.

''திமிங்கலத்தின் உடலுக்கடியில் வழுக்குகிற மாதிரி ஏதாவது எண்ணெய் ஊற்றினால் அதை இழுப்பது சுலபமாக இருக்குமே'' என்று ஒருவர் கருத்துக் தெரிவித்தார். ஆனால், கடலுக்கு இழுத்துச் செல்லும் தூரம் வரை எண்ணெய் ஊற்ற வேண்டுமானால், அதற்கு ஒரு லாரி நிறைய எண்ணெய் தேவை! யோசித்து, யோசித்து நான் என் தலையைப் பிய்த்துக் கொண்டேன். இயற்கை அறிவியல் சங்கத்தில் இருந்தும் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க வழி தெரியவில்லையே என்று துடித்தேன்.



திடீரென எனக்கு ஒரு யோசனை தோன்றியது.

''லட்சமி அக்கா!'' என்று கத்திய நான், ''நாம் எல்லாரும் பாஸ்லாஸ் சோப்பு (ஒரு விதமான கீரை), செம்பருத்தி பூவும் கலந்து பசை தயாரிக்கலாமே! அதை திமிங்கல த்தின் அடியில் இட்டு இழுத்தால் அது வழுக்கியபடி நகரும்!'' என்றேன்.

அது அசட்டுத்தனமான யோசனை யாகக் கூட இருக்கலாம். ஆனால், அந்த சமயத்தில் எல்லாருக்கும் அது நல்ல யோசனையாகத் தோன்ற, உடனே அங்கிருந்த பெண்கள் தங்கள் வீடுகளுக்கு விரைந்தனர். எங்கள் கிராமத்தில் மொத்தம் 670 குடும்பங்கள் இருந்தன. ஒருவர் பாக்கியில்லாமல் அனைத்துக் குடும்பத்தினரும் திமிங்க லத்தைக் கடலில் சேர்க்கும் முயற்சியில் ஒரு சேர ஈடுபட்டோம். முதலில் எங்கள் தோட்டத்தில் இருந்த எல்லாக் கீரைகளையும் பறித்து செம்பருத்திகளுடன் சேர்த்து அதன் பின் ஆலோவேரா இலை களையும் சேர்த்து ஒன்றாக அரைத் தோம். ஆலோவேரா இலைகளின் மசியல் வழவழப்பாக இருப்பதுடன் காயங்களையும் குணப்படுத்தும். திமிங்கலத்தை இழுக்கும்போது காயங்கள் ஏற்படலாமில்லையா?

விரைவில் நாங்கள் ஐந்து வாளி நிறைய பசை தயாரித்தோம். எங்களைப் போலவே ஒவ்வொரு குடும்பத்தினரும் பசை தயாரித்து அதை வாளிகள், தகர டின்கள், குடங்கள் ஆகியவற்றில் நிரப்பிக் கொண்டு வந்தனர். சிலர் பெரிய பீப்பாய் நிறைய பசை தயாரித்து அதை சைக்கிளிலும் மோட்டார் சைக்கிளிலும் கொண்டு வந்தனர்.

நாங்கள் அனைவரும் சாரை சாரையாக கடற்கரையை நோக்கி நடந்து வந்தது ராணுவ அணி வகுப்பைப் போலிருந்தது.

பிறகு எல்லாரும் பசையை திமிங்கலத்தின் அடியில் கொட்டிய பிறகு, அதை இழுத்து வரப்போகும் பாதை முழுவதும் பசையை நிரப்பினோம். அதன்பிறகு மக்கள் அனைவரும் சேர்ந்து திமிங்கலத்தைக் கடலை நோக்கி இழுக்கத் தொடங் கினர். ''இயற்கை அன்னையே! இந்தத் திமிங்கலத்தைக் காப்பாற்று'' என்று நான் வேண்டிக் கொண்டேன்.

என்ன ஆச்சரியம்? இத்தனை நேரம் ஓர் அணுகூட அசையாத திமிங்கலம், பசை போட்டு இழுத்த வுடன் மெதுவாக நகரத் தொடங் கியது. ஒருவாறாக அதைக் கடலுக் குள் இறக்கியபின், திமிங்கலத்தைக் கட்டி இருந்த கயிற்றினை படகு களுடன் பிணைத்து, படகுகளை கடலை நோக்கி மீனவர்கள் செலுத்த, திமிங்கலம் ஆழ்கடலுக்குள் மெது வாக இழுத்துச் செல்லப்பட்டது. ஆழ்கடலை அடைந்தவுடன், கயிறுக் அவிழ்க்கப்பட, திமிங்கலம் கடலுக் குள் நீச்சலடித்துக் கொண்டே சென்றது. அதைக் கண்ட என் மனம் முழுவது மாக நிறைவு பெற்றது.

# Non-stop fun @ chandamama.com!

## Non-stop fun @ chandamama.com!

Chandamama's Festive fun!

### What's your NEW YEAR RESOLUTION?

Post your NEW YEAR RESOLUTIONS at our site and print them for your future reference. Win surprise gifts for your resolutions- a motivation from our end for you to stick to your resolutions.

### Play our Cricket Quiz!

Know about your favourite players by answering simple questions. SMS CMCQ to 54646 and win fabulous prizes.

### Dear Chandamama

School issues? Friendship woes? Just plain confused about life and its problems?

Come to us with your questions and we will try to help you see light!

**Pankaj. Z from California:** Is komodo dragon a real dragon?

**Karan J from Powai:** I want to become a cartoonist. Please tell me how!

**Nihan Varma from Nainital:** I always yawn when I'm in a crowded place! Why is that?

To know the answers, browse CONNECT under CONTEMPORARY section at **www.chandamama.com**



### What's more...

Browse www.chandamama.com for hundreds of stories and comics for your reading pleasure...

Download cool games and applications at the Download center.

Want to become a Chandamama Author? Come **online** and submit your stories!

ஸ்விட்சர்லாந்து தேசத்து நாட்டுப்புறக் கதை

# இன்னிசை பாடிய மரம்



பல ஆண்டுகளுக்கு முன், ஸ்விட்சர்லாந்தில், எரகிங்கன் என்ற கிராமத்தில் ஒரு தச்சன் வசித்து வந்தான். கடவுள், தேவர்களின் உருவங்களை மரத்தில் செதுக்குவதில் அவன் கை தேர்ந்தவனாக இருந்தான். ஒரு நாள் மாலைப் பொழுதில், எரகிங்கன் கிராமத்து தேவாலயத்தின் மணி ஒலித்தபோது, அத்துடன் சேர்ந்து ஓர் இன்னிசைப் பாடலும் காற்றில் மிதந்து வந்து தச்சனின் செவிகளில் விழுந்தது.

தேவாலயத்து மணியொலிப்பது நின்றவுடன், அந்தப் பாட்டும் நின்று விட்டது. இது வெறும் மனப்பிரமை என்று தச்சன் நினைத்துக் கொண்டான். ஆனால், மறுநாள் மாலை தேவாலய மணி ஒலித்த போது, மணியோசை உடன் முதல் நாள் கேட்ட அதே பாடல் மீண்டும் ஒலித்தது. அந்தப் பாட்டைக் கேட்டு அவன் மெய் மறந்து போனான். அன்று மட்டுமன்றி, அதன்பிறகு ஒவ்வொரு நாளும் தேவாலய மணி ஒலிக்கையில் அந்த இன்னிசையும் ஒலித்தது. மணி ஓசை நின்றதும், இசையும் நின்றது. தான் மட்டும்தான் அந்தப் பாட்டை கேட்கிறோம் என்று முதலில் நினைத்த தச்சன், பிறகு கிராமத்தில் பலரும் அந்தப் பாடலைக் கேட்பதாக அறிந்தான்.

ஒருநாள் மாலையில் தேவாலய மணி ஒலிக்கையில் தச்சன் கிடுகிடு வென அந்த இன்னிசை வந்த திசையை நோக்கி விரைந்தான். கிராமத்தை ஒட்டி இருந்த ஓர் உயரமான மலையில் இருந்த ஹேபாச் காட்டிலிருந்துதான் அந்த இசை வந்தது. மலை மீதேறி காட்டுக்குள் நுழைந்து இசையொலியைத் தொடர்ந்து நடந்து சென்றான்.

இறுதியில் காட்டில் ஓரிடத்தில் மிகப்பெரிய ஃபிர் மரத்திலிருந்து அந்த இசை உண்டாவதை அறிந்தான். மரத்தின் அடிப்பாகத்திலிருந்து வந்த

## அம்புலிமாமா புதிர்போட்டி - 10 விடைகள் (நவம்பர் 2008)

*1) ரம்ஜான்; சவுதி அரபியாவிலுள்ள மக்காவில்; 2) கோகுலாஷ்டமி, கிருஷ்ணரின் பிறந்த தினம்; 3) தீஜ்; 4) பாரசீக மக்கள், படேட்டி.*

இசையைக் கேட்டு வியந்த அவன் பிறகு கிராமத்திற்குச் சென்று அந்த விஷயத்தை அனைவரிடமும் கூறினான். விஷயமறிந்த கிராமத்தினர் பலர் மறுநாள் முதல் காட்டுக்குச் சென்று அந்தப் பெரிய மரம் பாடுவதை மிக மிக ஆச்சரியத்துடன் கவனித்தனர்.

தச்சன் அடிக்கடி அந்த இடத்திற்குச் சென்று அந்த மரத்தின் அடிப்பாகத்தை ஆர்வத்துடன் தடவித் தடவிப் பார்த்தான். தானாக இசைபாடும் அந்த மரத்திலிருந்து தெய்வச்சிலை ஒன்றை உருவாக்க எண்ணினான்.

எரகிங்கன் கிராமத்து தேவாலயப் பாதிரியாரிடம் தன் ஆசையை அவன் கூறியபோது அவரும் சம்மதித்தார். அதன் பிறகு ஒரு நாள் பல ஆட்கள் ஒன்றுகூடி, அந்த மரத்தை வெட்டி சாய்த்தனர். நூறு ஆண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்து வந்த அந்த மரத்தை வெட்டும்போது, வெட்டுபவர்களுக்கே இதயம் கனத்தது.

அடிமரத்தை மட்டும் வெட்டி எடுத்துக் கொண்ட தச்சன், தான் கன்னி மேரியின் உருவச்சிலையை செய்யப் போவதாகப் பாதிரியாரிடம் தெரிவிக்க அவரும் சம்மதித்தார். அவருடைய சம்மதத்துடன் வேலையைத் தொடங்கிய தச்சன் முழு ஆர்வத்துடன் மரத்தில் கன்னி மேரியின் சிலையை அற்புதமாக செதுக்கினான்.

ஒருவாராக உருவச்சிலை தயாராயிற்று. மிக அழகாகக் காணப்பட மேரியின் சிலை தேவாலயத்தில் வைக்கப்பட்டு, ஆராதனை செய்யப்பட்டது. ஆயிரக்கணக்கில் மக்கள் கூடியிருந்தனர். என்ன ஆச்சரியம்? திடீரென மேரியின் உருவம் தன் வாயைத் திறந்து பாட ஆரம்பித்தது. அந்தப் பெரிய மரம் தினமும் பாடிய அதே தெய்வீக இன்னிசைப் பாடல் அன்றும் ஒலித்தது.

ஆனால், அன்றைக்குப் பின் மேரி பாடவேயில்லை.



மகான்களின் வாழ்விலிருந்து சில நிகழ்ச்சிகள் (36)

# சாரணர்களின் இயக்கம் பிறந்த வரலாறு



அன்னிபெசன்ட் பிரிட்டிஷ் பெண் மணியாக இருந்த போதிலும், இந்தியா மீது அவருக்கு ஆழ்ந்த ஈடு பாடு ஏற்பட்டது. திருமதி பிளாவாட்ஸ்கி இந்தியாவில் தியாசஃபிகல் சொசைட்டியை ஏற்படுத்தியபோது, அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பெசன்ட் உடனே இந்தியா வந்து சேர்ந்தார்.

இந்தியாவின் மீது ஆழ்ந்த பற்றுதல் ஏற்பட, இந்திய சுதந்திரப் போராட்டத்தில் அவரும் கலந்து கொண்டார். இந்திய தேசிய காங்கிரசின் முதல் தலைவியாகத் திகழும் வாய்ப்பையும் பெற்றார்.

இந்தியாவில் மாணவர்களின் சாரணர் இயக்கம் (Boy Scouts Movement) தோன்ற அவரே காரணமாக இருந்தார். சாரணரியக்கத்தை முதன் முதலாகத் தோற்றுவித்த பேடன் பவலிடம் இந்தியாவிலும் அதைத் தொடங்க வேண்டும் என்று அவர் பரிந்துரைத்துக் கடிதம் எழுதியபோது, அதற்கு பேடன் பவல், ''தேவையான ஆங்கிலேய அதிகாரிகள் இல்லாததால், இந்தியாவில் இதை உருவாக்குவது கடினம்'' என்று பதில் எழுதினார்.

அதைப்படித்த அன்னிபெசன்ட் ஏமாற்றமடைந்தார். இந்தியாவில் எவ்வாறேனும் சாரணர்கள் இயக்கத்தைத் தோற்றுவிப்பதென உறுதி பூண்டார். இத்தகைய சாரணர்கள் இயக்கம் இளைஞர்களிடையே நாட்டுப் பற்றைத் தூண்டி விடும் என்றும், அதுவே அவர்கள் சுதந்திர தாகத்தை அதிகரிக்கும் என்றும் நம்பினார்.

சாரணர்கள் இயக்கம் இளைஞர்களிடையே கட்டுப்பாடு, தன்னம்பிக்கை ஆகியவற்றை உருவாக்கும் என்று அறிந்திருந்த அம்மையார், அதை உருவாக்கத் தீவிரமாக செயற்பட்டார். முதலில் அவர் மாணவர்கள் பயிலும் பள்ளிகளைத் தேர்ந்தெடுத்து, தன் நோக்கத்தை விளக்கினார்.

நிறைய பள்ளிகள் அவருடைய கோரிக்கையை ஏற்றுக் கொண்டன. ஒவ்வொரு பள்ளியிலும் சாரணர் இயக்கத்தில் எத்தகைய பயிற்சி அளிக்க

வேண்டும் என்று தீர்மானித்தப்பின், பயிற்றுவிக்க பயிற்சியாளர்களையும் தேர்வு செய்தார். இவ்வாறு அன்னி பெசன்ட் அம்மையாரின் மேற்பார்வையில் பல பள்ளிகளில் சாரணர் இயக்கம் தோன்றியது. அந்தக் காலத்தில் சாரணர்களுக்கு என்று தனியாக சீருடை எதுவுமில்லை.

முதற்படியாக, அவர்களுக்கென சீருடைகளை வடிவமைத்து அளித்த அம்மையார், தலைக்குத் தொப்பிக்கு பதிலாக தலைப்பாகை அணிந்தால் நல்லது என்று அதையே சிபாரிசு செய்தார். ஒவ்வொரு சாரணனும் தனது தாய்மொழியில் தேசபக்திப் பாடல்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அதற்காக ஒவ்வொரு இந்திய மொழியிலும் பாடல்கள் இயற்றப்பட்டு இசை அமைக்கப்பட்டன.

சுத்தம், சுகாதாரம், பணிவு, நட்பு, தர்ம சிந்தனை, இரக்கம் ஆகியவற்றில் சிறந்து விளங்கத் தேவையான அம்சங்கள் பயிற்சியில் சேர்க்கப்பட்டன.



இவ்வாறு அம்மையாரின் பெருமுயற்சியின் காரணமாக, சாரணர் இயக்கம் தழைத்தோங்க ஆரம்பித்தது.

சாரணர் இயக்க ஸ்தாபகரான பேடன் பவல் இந்தியாவில் வளர்ந்து வரும் சாரணர் இயக்கத்தைப் பார்வையிட வரப்போவதாக செய்தியறிந்து அம்மையார் பரபரப்பு அடைந்தார். பிரிட்டனில் உள்ளது போல் சிறப்பாக இருப்பதாகக் கருதுவாரா அல்லது இந்தியாவுக்கு இந்த இயக்கம் ஒத்து வராது என்று நினைப்பாரா என்று சஞ்சலப்பட்டார்.

பேடன் பவல் அவர்கள் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். இந்தியாவைப் பற்றிய அவநம்பிக்கையுடன் வந்தவர், தான் பார்த்த முதல் சாரணர் இயக்க அணிவகுப்பிலேயே அசந்து போனார். மிகுந்த வியப்புடன் அன்னிபெசன்ட் அம்மையாரை நோக்கி, ''பிரிட்டிஷ் சாரணர் இயக்கத்துடன் இந்திய இயக்கத்தை சேர்த்துவிட முடிவு செய்து விட்டேன். நான் இங்கு கண்டது என்னை வியப்படையச் செய்து விட்டது'' என்று அம்மையாரைப் பாராட்டியபின் அவரையே இந்திய சாரணர் இயக்கத்தின் தலைவராக நியமித்தார். தனக்குக் கிடைத்த பதவியை அவர் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. தான் இந்தியாவில் சாரணர் இயக்கத்தைத் தோற்றுவிக்க எடுத்துக் கொண்ட முயற்சிகள் பிரமாத வெற்றி அடைந்ததே அவருக்கு அதிக மகிழ்ச்சியை அளித்தது.

– ஆர்.கே

# தீபாவளியன்று விடுதலை

தீபாவளி என்றாலே தீபமும், ஒளியும் தான் நினைவுக்கு வரும். ஆனால், 1942ஆம் ஆண்டில் பீஹார் மாநிலத்தில் ஹசாரிபாக் சிறையில் அடைப்பட்டிருந்த சுதந்திரப் போராட்டத் தியாகிகள் தீபாவளி நெருங்க நெருங்க, சிறையிலிருந்து எப்படி தப்பியோடுவது என்பது பற்றி தீவிரமாகத் திட்டம் இட்டுக் கொண்டு இருந்தனர். 1942ஆம் ஆண்டில் ஆகஸ்ட் மாதம் மகாத்மா காந்தி 'வெள்ளையனே வெளியேறு!' என்ற கோஷத்தை முழங்கிக் கொண்டு, பிரிட்டிஷாருக்கு எதிராக ஆர்ப்பாட்டத்தைத் தொடங்கிய உடன், பெரும்பாலான தேசியத் தலைவர்கள் கைது செய்யப்பட்டு சிறைகளில் அடைக்கப் பட்டனர்.

ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் ஹசாரிபாக் சிறையில் மற்ற தொண்டர்களுடன் அடைக்கப்பட்டார்.

ஒருநாள் மாலை நேரத்தில் ஜெயப்பிரகாஷ் பொறுமையை இழந்து சிறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டு இருந்தார். வெள்ளையர்களை எதிர்த்து முழுமூச்சுடன் போராட்டம் நடத்த வேண்டிய சமயத்தில் தான் இவ்வாறு சிறைப் பட்டிருந்தது பிடிக்கவில்லை. சிறையில் ஒரு துவாரத்தின் வழியாக வானில் பறந்து சென்று கொண்டு இருந்த பறவைகளைப் பார்த்தார். அவை எவ்வளவு நன்றாக இருக்கும் என எண்ணினார். ஆனால், பலத்தப் பாதுகாப்புள்ள ஹசாரிபாக் சிறையில்



இருந்து தப்புவதைப் பற்றி கனவு கூட காண முடியாது என்று தோன்றியது. அதைப்பற்றி சிறையில் இருந்த அவருடைய தோழர்களுடன் ஆலோசித்தபோது, அவர்களில் பெரும்பாலோர் அது முடியாத காரியம் என்று கூற சிலர் மட்டும் முயன்றால் முடியும் என்று நம்பிக்கையளித்தனர்.

ஜெயப்பிரகாஷின் நெருங்கிய தோழரான சின்ஹா அவரைப் பார்த்து, ''ஜேபி! உன்னை எப்படியாவது தப்பிக்க வைக்கிறேன். ஆனால், உன்னுடன் சேர்ந்து நானும் தப்பிக்க முடியாது. நீ மட்டும் தப்பிச் செல்! நீ தப்பிச் செல்வது மிகவும் அவசியம். சுதந்திரப் போராட்டம் தீவிரமாகவும், வெற்றிகரமாகவும் நடைபெற, உன்னைப் போன்றவர்கள் சிறைக்குள் இருக்கக்கூடாது'' என்றார்.

உடனே, தோழர்கள் சிலர் கூடி தப்புவதற்கானத் திட்டத்தைத் தயாரித்தனர். சிறைச்சாலையைச் சுற்றியிருந்த பாதுகாப்புச் சுவரைக் கடக்க ஒரு உறுதியான நீளமான கயிறு தேவைப்பட்டது. அதற்காக தங்கள் படுக்கை விரிப்புகளையும் வேட்டிகளையும் சேர்த்துத் திரித்து ஒரு நீளக் கயிறை உருவாக்கினர். தப்பிச் செல்ல சரியான நாளையும் குறித்தனர். தீபாவளி இரவென்று அமாவாசை இருட்டில் தப்பிக்க முடிவு செய்தனர். கைதிகள் சிறைக் காவலர்களுக்கு, இனிப்பு வழங்கி அவர்களையும் தீபாவளி கொண்டாட அழைத்தனர். ஜெயப்பிரகாஷின் தோழரான சின்ஹா சிறைக் காவலர்களுக்கு சுவாரஸ்யமான கதைகளைக் கூறிக்கொண்டு அவர்களுடைய கவனத்தைத் திசை திருப்ப அந்த சமயம் ஜெயப்பிரகாஷும் அவருடைய நான்கு தோழர்களும் சத்தம் இன்றி தங்கள் உடைமைகளுடன் சிறைச்சாலைக்கு வெளியே சென்று பாதுகாப்புச் சுவரை அடைந்தனர். தாங்கள் ஏற்கெனவே தயாரித்திருந்த கயிற்றை காம்பவுண்டு சுவரின் உச்சியில் வீசி அங்கேயிருந்த ஒரு கம்பியில் அது சிக்குமாறு செய்தனர். முதலில் ஜெயப்பிரகாஷ் தான் தப்புவதாகக் கூறிவிட்டு, கயிற்றைப் பிடித்துக் கொண்டு சரசரவென ஏறி காம்பவுண்டு சுவரின் உச்சியை அடைந்தார். அங்கிருந்து சிறைச்சாலைக்கு வெளியே குதித்தார். குறித்த இடத்தில் காய்ந்த இலைகள் படர்ந்து இருந்ததால் அடிபடவில்லை. பின்னர் அவருடைய நான்கு தோழர்களும் அவரைப் பின் தொடர்ந்து தப்பினர்.

சிறைச்சாலைக்கு வெளியே வந்ததும், ஒருவரையொருவர் மகிழ்ச்சியுடன் கட்டிக் கொண்டனர். அப்போது

## அம்புலிமாமா புதிர்ப்போட்டி-10 நவம்பர் 2008

**மேற்கூறிய புதிர்ப்போட்டியில் வாசகர்கள் சரியான விடைகள் அளிக்காததால் பரிசுகள் வழங்கப்படவில்லை. இதற்கான சரியான விடைகள் 45 ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டு உள்ளது. இதனால் வாசகர்கள் மனம் தளர வேண்டாம் என்றும், வரப்போகும் போட்டிகளில் பங்கேற்குமாறும் வேண்டிக் கொள்கிறோம்.**

தான் அவர்கள் தங்கள் உடைமை களை மறந்து விட்டு தாங்கள் மட்டும் தப்பியது தெரிந்தது. பிறகு, உடைமை கள் போனால் போகிறது என்று தேற்றிக் கொண்டு, காரிருளில் நடக்கத் தொடங்கினர். இரவு முழுவதும் நடந்து, பொழுது விடியும் போது நெடுஞ்சாலையை அடைந்தனர்.

அப்போது திடீரென பயங்கர ஒலியுடன் ஒரு ஆகாய விமானம் தலைக்குமேல் பறந்து செல்ல, அது தங்களைத்தான் தேட அனுப்பப் பட்டதோ என்ற பயத்தில் புதர்க ளிடையே மறைந்து கொண்டனர். ஆகாய விமானம் பார்வையிலிருந்து மறைந்த பின்னரே வெளியே வந்தனர்.

பிறகு, நெடுஞ்சாலையை அடைந்து அங்கு வரிசையாகச் சென்று கொண்டு இருந்த மாட்டு வண்டிகளை நிறுத்தி, தங்களை ஏற்றிக் கொள்ளுமாறு வேண்ட, அவர்கள் உடுத்தியிருந்த கைதிகளின் உடைகளைக் கண்டு தயங்கினர். கடைசியில், அவர்கள் சுதந்திரப் போராட்ட வீரர்கள் என்று தெரிந்து கொண்ட பின், ஒரு வண்டிக் காரன் அவர்களை ஏற்றிக் கொண்டான். அவர்கள் அருகிலிருந்த ஒரு கிராம த்தில் இறங்கி விட்டான். ஜெயப் பிரகாஷை நன்கு அறிந்திருந்த அவர் கள் அவரையும், மற்ற தோழர்களை யும் வரவேற்று, உணவு அளித்து உபசரித்தனர். பின்னர் ஜெயப் பிரகாஷும், தோழர்களும் விவசாயி கள் போல் வேடமணிந்து கொண்டு தங்கள் தங்கள் ஊரை நோக்கிப் புறப்பட்டனர். அதற்குள் அவர்கள் சிறையிலிருந்துத் தப்பிவிட்டதை அறிந்த சிறைக்காவலர்கள் அவர்களைத் தேட நாற்திசையிலும் வலை வீசினர். ஆனால், ஜெயப்பிரகாஷையும் அவர் தோழர்களையும் அவர்களால் பிடிக் கவே முடியவில்லை.

அடுத்த ஐந்து ஆண்டுகளில் ஜெயப்பிரகாஷ் கயாவிலும், பனார சிலும் மாறி மாறி வசித்துக் கொண்டு இருந்தார். பிரிட்டிஷாரை எதிர்த்துப் புரட்சி செய்ய இளைஞர்களின் அணி யைத் திரட்டினார். அதன் பிறகு இந்தியா சுதந்திரம் அடையும் வரை, பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடு வதில் கழித்தார். தன் தாய் நாட்டை உயிரினும் மேலாக நேசித்த ஜெயப் பிரகாஷ் 'லோக் நாயக்' என பொது மக்களால் அன்புடன் அழைக்கப்பட்டாலும், அவர் தன்னை ஒரு 'லோக் சேவக்' என்றே எளிமையாகக் குறிப்பிட்டுக் கொண்டார்.



*ஆர். கே.*

# கிரிக்கெட்டின் எவரெஸ்டில் சச்சின்




உலகப் புகழ் பெற்ற குத்துச் சண்டை வீரர் முகம்மது அலி ''நான்தான் மிகச் சிறந்தவன்'' என்று பெருமையடித்துக் கொள்வார். அதற்கு மாறாக கிரிக்கெட்டில் கணக்கற்ற சாதனைகள் புரிந்துள்ள சச்சின் டெண்டுல்கரோ அடக்கத்தின் அவதாரம்! மொகாலியில் அக்டோபர் 17ஆம் தேதியன்று இந்தியா-ஆஸ்திரேலியா டெஸ்ட் கிரிக்கெட் போட்டி நடந்து கொண்டிருந்த போது, டெஸ்ட் பந்தயங்களில் இதுவரை அதிக ரன்கள் குவித்துள்ள பிரயான் லாராவின் (11,953 ரன்கள்) சாதனையை சச்சின் முறியடிக்கும் தருணத்தை எதிர்நோக்கி அனைவரும் ஆவலுடன் காத்திருந்தனர். 15 ரன்களே எடுக்கவேண்டி இருந்த நிலையில், தேநீர் இடைவேளைக்குப் பிறகு சச்சின் அதை எடுத்து இமாலய சாதனை புரிந்தார். இதுவரை டெஸ்டு பந்தயங்களிலும், ஒருநாள் போட்டித் தொடர்களிலும் உலக அளவில் மிக அதிக ரன்கள் குவித்தள்ளவர் என்ற தலையாய சாதனையைப் புரிந்தார். தனது 16வது வயதில் முதல் டெஸ்டில் விளையாடிய இவர் இதுவரை 39 டெஸ்டுகளில் சதம் அடித்திருக்கிறார். 42 ஒரு நாள் தொடர்களிலும் சதம் அடித்திருக்கிறார். ஒருநாள் தொடர்களில் இவர் 16,361 ரன்கள் குவித்து இருக்கிறார். 'லிட்டில் மாஸ்டர்' என்று செல்லமாக அழைக்கப்படும் சச்சின் 25 டெஸ்டுகளில் இந்திய அணிக்குத் தலைவராக இருந்து இருக்கிறார். ஹர்ஷா போக்லே என்ற கிரிக்கெட் விமரிசகர் சச்சினை பற்றி ''கிரிக்கெட்டில் எவரெஸ்டின் உச்சியில் நிற்பவர் சச்சின்'' என்று அவரை வர்ணித்துள்ளார்.

**பி.கு:** கடந்த நவம்பர் 6ஆம் தேதி நாக்பூர் கிரிக்கெட் டெஸ்டில் சச்சின் 40வது சதத்தையும் அடித்து இமயத்தையும் விட உயர்ந்தார்.



## நிலவுக்கனுப்பிய விண்கலம்

இந்தியா முதன் முதலாக ஒரு விண்கலத்தை நிலவுக்கு வெற்றிகரமாக அனுப்பியுள்ளது. அதற்கு சந்திரயான்-1 என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது. வடமொழியில் சந்திரயான் என்றால் நிலவு விண்கலம் என்று பொருள்! இதன் மூலம் நிலவைப் பற்றி பல அரிய தகவல்களை அறிய முடியும்.

அக்டோபர் 22ஆம் தேதி ஒரு PSLV ஏவுகணை மூலம் விண்வெளியில் செலுத்தப்பட்ட இந்த விண்கலத்தின் எடை 1,380 கிலோ. அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கு இது நிலவினை ஆராய்ச்சி செய்யும்.

பூமிக்கும் நிலவுக்கும் உண்டான நான்கு லட்சம் கி.மீட்டரை இது படிப்படியாகக் கடந்து, சென்ற ஆண்டு நவம்பர் 12ஆம் தேதி நிலவுக்கு 100 கி.மீ தொலைவில் சுற்றத் தொடங்கியது.

## இளம் எழுத்தாளரின் சாதனை

ஒவ்வோர் ஆண்டும், சிறந்த எழுத்தாளருக்கு 'மேன் புக்கர்' பரிசு வழங்கப்படுகிறது. சென்ற ஆண்டிற்கான பரிசைப் பெற்றவர் அரவிந்த் அடிகா என்ற இந்தியர்! இவர் எழுதிய 'தி வைட் டைகர்' என்ற நாவலுக்காக இப்பரிசை அவர் பெற்றுள்ளார். அகில உலக அளவிலான இந்தப் பரிசின் மதிப்பு 50,000 பவுண்டுகள். பிரிட்டன், அயர்லாந்து மற்றும் காமன்வெல்த் நாடுகளைச் சேர்ந்த எழுத்தாளர்கள் எழுதும் ஆங்கில நாவல்கள் இந்தப் பரிசுப் போட்டியில் கலந்து கொள்ளத் தகுதி பெற்றவை.

1974ஆம் ஆண்டில் மதராசில் (தற்போது சென்னை) பிறந்த அடிகா தனது பள்ளிப் படிப்பை இந்தியாவிலும், பிறகு ஆஸ்திரேலியாவிலும் முடித்தபின், நியூயார்க்கில் கொலம்பியா பல்கலைக்கழகத்திலும், பின்னர் ஆக்ஸ்ஃபோர்டில் மக்தாலேன் கல்லூரியிலும் ஆங்கில இலக்கியம் பயின்றார். அவருடைய கட்டுரைகள் 'தி ஃபைனான்ஷியல் எக்ஸ்பிரஸ்', 'தி இன்டிப்பென்டென்டன்ட்' போன்ற நாளேடுகளில் வெளியாகி உள்ளன. இதற்கு முன் மேன் புக்கர் பரிசு பெற்ற இந்தியர்கள் வி.எஸ். நைப்பால், சல்மான் ருஷ்தி, அருந்ததி ராய், கிரண் தேசாய் ஆகியோர்!





# ஜலராட்சஸன்

பல ஆண்டுகளுக்கு முன் காசி மன்னன் காசியை மிகவும் நேர்மை உடன் ஆண்டு வந்தான். அவருக்கு இரண்டு மகன்கள் இருந்தனர். மூத்தவன் மகேசனும் இளையவன் சந்திரகுமாரனும் ஆவர். சந்திர குமாரன் சிறுவனாக இருக்கும் போதே மகாராணி இறந்து விட்டார்.

சில மாதங்களுக்குப் பின் மன்னன் இரண்டாவது திருமணம் செய்து கொண்டான். அவளுக்குச் சூரிய குமாரன் என்ற மகன் பிறந்தான்.

சூரியகுமாரன் பிறந்தபோது மன்னன் தன் இளைய மனைவியிடம் ''உன் கோரிக்கை ஏதாவது இருந்தால் சொல், நான் நிறைவேற்றுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட அவளும் ''இப் போது நான் கூறவில்லை. பிறகு சமயம் வரும் போது நான் கூறு கிறேன். அப்போது அதை நிறை வேற்றுங்கள்'' என்றாள். மன்னனும் அதற்கு சம்மதித்து விட்டார்.

சூரியகுமாரன் வளர்ந்து வாலிபன் ஆனான். அப்போது இளைய மனைவி மன்னனிடம் ''நீங்கள் முன்பு என்னி டம் கேட்ட கோரிக்கையைக் இப் போது கூறுகிறேன். உங்களுக்குப் பின் என் மகனை மன்னன் ஆக்குங் கள்'' என்றாள்.

அதைத் கேட்ட காசி மன்னன் ''இவனை விட மூத்தவர்கள் இருக்கும் போது சூரியகுமாரனை மன்னன் ஆக்குவது முடியாது'' எனக்கூறி மறுத்துவிட்டான்.

பிறகு அவன் மனத்தில் இளைய ராணி மகேசனையும், சந்திரகுமார னையும் ஒழிப்பாளோ என்ற சந்தேகம் எப்போதும் இருந்து கொண்டே இருந்தது.

அதனால் மன்னன் ஒருநாள் அவர்கள் இருவரையும் தனியே

ஜாதகக் கதை




கள். அவர்கள் கிளம்புவதைப் பார்த்த சூரியகுமாரனும் தன் உடைமை களை எடுத்துக் கொண்டு அவர்க ளோடு கிளம்பிவிட்டான். அவனுக்கு அவர்கள் ஏன் காட்டிற்குப் போகி றார்கள் என்பது தெரியாது. மூவரும் இமயமலைக்குச் சென்றார்கள்.

மகேசனாக போதிசத்வர் தான் பிறந்திருந்தார். அவர் தம் இரு தம்பி களையும் அழைத்துக் கொண்டு நடந்தவாறே களைத்துப் போய் ஒரு மரத்தடியே உட்கார்ந்தார்.

சற்று தூரத்தில் ஒரு குளத்தைக் கண்ட அவர், சூரியகுமாரனிடம் ''தம்பீ! அதோ தெரியும் குளத்திற்கு நீ போய் தாகத்தைத் தணித்துக் கொண்டு எங்களுக்கும் குடிக்கத் தாமரை இலையில் தண்ணீர் கொண்டு வா'' என்று கூறி அனுப்பினார்.

அந்தக் குளத்தில் ஒரு ஜலராட்சஸன் இருந்து வந்தான். குபேரனின் ஆணையின் பேரில், அதில் இறங்கு பவர்களிடம் தேவ தர்மம் என்ன என்று கேட்டு அதற்குப் பதில் சொல்ல முடியாதவர்களை அவன் தன் இடத்திற்குப் பிடித்துப் போய், சிறை வைத்து வந்தான். அது மட்டுமன்றி காலப்போக்கில் அவர் களை ஒவ்வொருவராக சாவகா சமாகத் தின்றும் வந்தான்.

சூரியகுமாரன் அக்குளத்தில் இறங்கியதும், ஜலராட்சஸன் ''தேவ தர்மம் என்றால் என்ன? அதைக் கூறினால்தான் இந்தக் குளத்தின் நீரை நீ குடிக்கலாம்'' என்றான்.

இதைக் கேட்ட சூரியகுமாரனும்

அழைத்து ''உங்கள் சிற்றன்னைக்கு நான் முன்பு ஒரு வரம் கொடுத்து இருந்தேன். அதை இப்பொழுதுதான் அவள் கேட்டாள். அதன்படி அவள் தன் மகனை இந்த நாட்டின் மன்னன் ஆக்கக் கோருகிறாள். ஆனால், என்னால் அதற்கு இணங்க முடிய வில்லை. என்ன இருந்தாலும் பெண் புத்தி எப்படி செயல்படும் என்று என்னால் யூகிக்க முடியவில்லை. அவள் உங்களுக்கு ஏதேனும் தீங்கு விளைவிக்கலாம். அதனால் நீங்கள் இப்போது காட்டிற்குள் போய் மறைந்து வாழுங்கள். நான் இறந்து விட்டேன் என்ற செய்தியைக் கேட்டதும், திரும்பி வந்து இந்த நாட்டை ஆளுங்கள்'' என்றான்.

தன் தந்தையின் விருப்பத்திற்கு ஏற்ப மறுநாள் மகேசனும், சந்திர குமாரனும் காட்டிற்குக் கிளம்பினார்

''தேவ தர்மம் என்றால் சூரிய சந்திரர்கள்'' என்று பதிலளித்தான்.

''உனக்கு தேவ தர்மம் தெரிய வில்லை'' எனக் கூறி அவனைப் பிடித்துக் தன் இருப்பிடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்தான்.

சூரியகுமாரன் போய் வெகுநேர மாகியும் திரும்பி வராததால் போதி சத்வர் சந்திரகுமாரனைக் குளத்தி ற்குப் போய்ப் பார்த்து வரும்படி அனுப்பினார். அவனும் அந்தக் குளத்திற்குச் சென்றான். சூரியகுமார னைப் போல் சந்திரகுமாரனும் குளத்தில் இறங்கியதும், ஜலராட் சஸன் ''தேவ தர்மம் என்றால் என்ன?'' என கேட்கவே, அவன் ''எட்டு திக்குகள்'' எனப் பதில் அளித்தான்.

அவனது பதிலும் சரியில்லை எனக் கூறி ஜலராட்சஸன் அவனை யும் பிடித்துக் கொண்டு போய் சிறை வைத்தான்.

இரு தம்பிகளும் திரும்பி வராதது கண்டு போதிசத்வர் அக்குளத்தின் கரைக்குப் போய் குளத்தில் இறங்கா மல் கரையிலேயே நின்றார்.

அது கண்டு ஜலராட்சஸன் ஒரு வேடனின் உருவில் அவர் முன் வந்து ''ஏன் ஐயா குளத்தில் இறங்காமல் நிற்கிறீர்கள்? இதில் இறங்கித் தண்ணீர் குடித்து உங்களின் தாகத் தைத் தீர்த்துக் கொள்ளலாமே'' என்றான்.

போதிசத்வரும் சற்று அவனை உற்றுப் பார்த்து ''ஓகோ! இதற்குமுன் இங்கு வந்த என் இரு தம்பிகளையும் பிடித்து வைத்திருப்பவன் நீதானா?''



என்று கேட்டார். அவனும் ''ஆமாம், இக்குளத்தில் இறங்குபவர்கள் தேவ தர்மம் என்ன என்று சொல்ல வேண்டும். சரியாகச் சொல்லா விட்டால், அவர்கள் எனக்கு இரையாக வேண்டும். உங்கள் இரு தம்பிகளும் அதற்கு சரியான பதில் சொல்ல வில்லை. அதனால் என்னிடம் அகப் பட்டு விட்டார்கள். நான் தான் அவர் களை சிறைப்பிடித்து வைத்து இருக்கிறேன்'' என்றான்.

போதிசத்வரும் ''அப்படியா! தேவ தர்மம் என்றால் என்ன என்று நான் கூறுகிறேன்'' என்று பெருமைமிக்க செயலைச் செய்தும், பழிக்கு அஞ்சி யும், நற்காரியங்களைச் செய்தும் அமைதியாக வாழ்பவன் செயலே தேவ தர்மம்'' என்றார்.

ஜலராட்சஸனும் அதுவே சரியான பதில் எனக்கூறி அவரை உபசரித்

தான். பிறகு அவன் ''உங்கள் இரு தம்பிகளில் ஒருவனை நீங்கள் திரும்பப் பெறலாம். யார் வேண்டும்?'' என்று கேட்டான்.

போதிசத்வரும் ''என் இளைய தம்பியான சூரியகுமாரனை விட்டு விடு'' எனவே, ஜலராட்சஸனும் ''நீங்கள் ஏன் உங்களுடன் பிறந்த தம்பியான சந்திரகுமாரனைக் கேளாமல், உங்கள் சிற்றன்னையின் மகனான சூரியகுமாரனைக் கேட்டீர்கள்?'' என்று கேட்டான்.

போதிசத்வரும் ''இதுதான் தேவ தர்மம். நான் சூரியகுமாரனின் காரணமாகத்தான் இக்காட்டிற்கு வந்தேன். இவனது தாய் என் தந்தையிடம் இவனுக்காக நாட்டைக் கேட்டாள். என் தந்தையோ எங்கள் நன்மையைக் கருதி, எங்கள் இரு வரையும் காட்டிற்கு அனுப்பினார். சூரியகுமாரன் இதெல்லாம் எதுவும் தெரியாமல், நாங்கள் கிளம்பியதும் எங்களோடு வந்துவிட்டான். நாங்கள் ஊர் திரும்பும்போது, சூரியகுமாரன் எங்களோடு இல்லாவிட்டால், நாட்டிலுள்ளவர்கள் நாங்கள் இரு வரும் சேர்ந்து அவனைக் கொன்று விட்டதாகத்தான் நினைப்பார்களே ஒழிய, ஜலராட்சஸன் அவனை விழுங்கி விட்டான் என்றால் யாரும் நம்ப மாட்டார்கள்'' என்றார்.

ஜலராட்சஸன் ''ஆகா! என்ன உயரிய குணம்'' என அவரைப் பாராட்டி, சூரியகுமாரனையும், சந்திரகுமாரனையும் விடுதலை செய்து அவரிடம் கொண்டு வந்து சேர்த்தான்.

சிறிது காலத்திற்குப்பின் காசி மன்னன் இறந்து போனான். அச் செய்தி காட்டில் உள்ள அம்மூவரு க்கும் தெரியவரவே, மூன்று அரச குமாரர்களும் உடனே காசிக்குச் சென்றனர். அனைவரது முன்னி லையிலும் போதிசத்வர் மன்னர் பட்டம் சூட்டிக் கொண்டார்.

சந்திரகுமாரன் இளவரசுப் பட்டம் கட்டிக் கொள்ள, சூரியகுமாரன் நாட்டின் சேனாதிபதியானான். இவ்வாறு மூவரும் ஆட்சியில் பங்கு கொண்டு சுகமாக வாழ்ந்தனர்.





# இராமாயணம்

இராமர் அனுமார் கூறியதை எல்லாம் கேட்டு ஆனந்தம் அடைந்தார். அவரும் ''ஆகா! இப்படிப்பட்ட வேலையை வேறு யாரால் செய்ய முடியும்? கடலைக் கடப்பது என்பது சாமான்னியமானதா? அப்படிக் கடந்து இலங்கைக்குள் நுழைந்து சீதையைப் பார்த்து விட்டுத் திரும்பி வந்திருக்கிறார். இலங்கையை நாசப்படுத்தி இராவணனது கட்டு திட்டங்களை எல்லாம் தவிடு பொடியாகச் செய்து விட்டார் அல்லவா! இவர் எனக்கும் சீதைக்கும் மறுவாழ்வு அளித்தவராவார்'' எனக் கூறி அனுமாரை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டார்.

சற்று நேரத்திற்குப் பின்னர் அவர் சுக்ரீவனைப் பார்த்து, ''சீதை இருக்கும் இடத்தை கண்டு பிடித்தாகிவிட்டது. இனி நாம் அங்கே எப்படிப் போவது என்பது ஒரு பெருத்த பிரச்சினையாகி விட்டதே!'' எனக் கவலையோடு கூறலானார்.

அப்போது சுக்ரீவன் ''நீங்கள் இது பற்றி கவலைப்பட வேண்டாம். இலங்கைக்குப் போக சமுத்திரத்தில் பெரிய பாலம் கட்டுவோம். அதற்கான ஏற்பாடுகளைச் செய்தால் போயிற்று. அதை மட்டும் செய்து முடித்து விட்டால் இராவணனின் வாழ் நாள்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். எனவே அதற்கான செயலில் ஈடுபடலாம்'' என உற்சாக மொழிகளைக் கூறினான்.

இராமரும் ''ஆமாம், இலங்கையை

யுத்த காண்டம் - 1



நாம் எப்படியும் அடைந்தே தீர வேண்டும். அது பாலம் கட்டிப் போனாலும் சரி, அல்லது தவம் செய்து போனாலும் சரி. எப்படியும் எடுத்த வேலையை மனம் தளராமல் செய்ய வேண்டும்'' எனக் கூறினார்.

பின்னர் அனுமாரிடம் ''இலங்கைக் கோட்டையின் அமைப்பு எப்படி? இராவணனின் படை பலம் எவ்வளவு? பாதுகாப்பு அமைப்பு எவ்விதம் உள்ளது?'' என்று பல கேள்விகளையும் அவர் கேட்டார். அனுமாரும் ''இலங்கைவாசிகளைப் பார்த்தால் அவர்கள் எவ்வித குறையும் இன்றி வாழ்வதாகவே தெரிகிறது. இலங்கை மிகப் பெரிய பட்டணம். அதில் நால்வகைப் படைகள் தக்க முறையில் பயிற்சி அளிக்கப்பட்டு வைக்கப்பட்டு உள்ளன. அதற்குள் போக நான்கு கோட்டை வாசல்கள் உண்டு. அங்கு எதிரிகளை அழிக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு உள்ளன. கோட்டையைச் சுற்றிலும் ஆழமான அகழி உள்ளது. அதனைத் தாண்டிச் செல்வது சுலபமல்ல. எதிரிகள் தம் படைகளோடு திடுதிப்பென அதற்குள் சென்று விட முடியாது.

''அகழிகளைக் கடக்க மரப்பாலங்களை அவ்வப்போது உயர்த்தி தாழ்த்திக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டு உள்ளது. எனவே இலங்கை நன்கு பாதுகாப்புடன் உள்ளது என்பதை அறியலாம். அது மட்டுமல்ல இராவணனிடம் எப்போதும் போர் புரிய படைகள் தயாராகவே உள்ளன.

போருக்கென படை தயாரிக்க வேண்டியது இல்லை. இதெல்லாம் போக இலங்கையைப் பாதுகாக்க சுற்றிலும் சமுத்திரமும் ஒருபுறம் திரிகூட மலையும் உள்ளதால் அதனை அடைவது சிரமமே. இவ்வளவும் கடந்தால் அடர்ந்த காடுகள். இவற்றைத் தாண்டினால் கோட்டையைச் சுற்றிலும் செய்யப்பட்டு உள்ள பாதுகாப்பு ஏற்பாடுகள். பயங்கரமான அரக்கர்கள் ஆங்காங்கு நிறுத்தப்பட்டு இருக்கிறார்கள். நான் பல அரக்கர்களைக் கொன்று வந்திருக்கிறேன். பல இடங்களை நாசம் செய்து விட்டேன். ஆதலால் இப்போது இலங்கைக்குள் நுழைவது சற்று சுலபமாக இருக்கலாம். நம்மிடம் பல இணையற்ற வீரர்கள் இருக்கிறார்களே! அங்கதன், துவிவீதன், மைந்தன், ஜாம்பவந்தன்,

பனகன், நளன், நீலன் முதலிய சேனைத் தலைவர்கள் உள்ளனர். இவர்களால் இலங்கையில் உள்ள அரக்கர்களோடு போரிடமுடியும். எனவே ஒரு நல்ல வேளை பார்த்து இலங்கை மீது படை எடுத்துக் செல்ல நீங்கள் முடிவு செய்துவிடுங்கள்'' என்றார்.

அதையெல்லாம் இராமர் நன்கு கேட்டுவிட்டு சுக்ரீவனிடம் ''அனுமார் கூறியபடி இலங்கை மீது படை எடுத்துச் செல்வோம். இன்றே இப் போதே கிளம்பலாம். இப்போது உச்சிவேளை இதை அபிஜித்து என்ற நல்ல முகூர்த்த காலம் எனக்கூறுவர். இந்த வேளையில் ஆரம்பிக்கும் வேலை வெற்றிகரமாக முடியும். மேலும் இன்று பங்குனி உத்திரம். என் பிறப்பு நட்சத்திரமான புனர்பூச நட்சத்திரத்திற்கு அனுகூலமானது. மேலும் பல நல்ல அறிகுறிகள் சேர்ந்து இருப்பதால் இந்த முகூர்த்த வேளையிலேயே நாம் கிளம்பலாம்'' என்றார்.

உடனே படைத்தலைவனான நீலன் இராமரின் ஆலோசனைப் படி படையை அமைக்கலானான். படை முன் செல்லும் வானர வீரர்களைத் தேர்ந்தெடுத்தான். படையின் இரு புறமும் செல்லும் வானர வீரர்களை யும் குறிப்பிட்டான். பின்புறமாகச் செல்லும் படை வீரர்களையும் நியமி த்தான். உணவுப் பொருள்களைச் சேகரிக்க வானரங்களையும் செல்லும் வழியைக் காட்ட பல வானரங் களையும் நியமித்தான். இப்படியாக



அவன் தக்க முன்னேற்பாடுகளை எல்லாம் செய்து விட்டான்.

எல்லாம் செய்து முடித்தபிறகு சுக்ரீவன் இனி யாவரும் கிளம்புங்கள் எனக்கட்டளை இடவே வானரங்கள் உற்சாகத்தோடு கோஷங்கள் போட்ட வாறே பல இடங்களில் இருந்தும் கிளம்பி வந்தன. ஒரு பெருத்த கடலே தென் திசையை நோக்கிச் செல்வது போல இருந்தது. அனுமார் இராமரைத் தன் தோளில் ஏற்றிக் கொண்டார். இலட்சுமணனை அங்கதன் தூக்கிக் கொண்டான்.

வானரங்கள் சிரித்துக் கொண்டும் குதித்துக் கொண்டும் கத்திக் கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் உற்சாகம் கரை புரண்டு ஓடிச் செல்லலாயினர். ரிஷபன், நீலன், குமுதன் ஆகியோர் முன் நின்று வழி காட்ட அந்தப் பெரிய வானரசேனை இலங்கையை

நோக்கி செல்லலாயிற்று. வெகு சீக்கிரத்திலேயே யாவரும் சமுத்திரக் கரையைச் சென்று அடைந்தனர்.

இராமரும், இலட்சமணனும் சுக்ரீவனுமாக மகேந்திர மலையின் மீது ஏறிச் சுற்றிலும் பார்த்தனர். அங்கிருந்து கடலைப் பார்த்துவிட்டு அவர்கள் கீழே இறங்கி வந்தனர். கடற்கரை அருகே போய் கடலையும் நன்கு கவனித்தனர்.

அதன் பிறகு இராமர் சுக்ரீவனிடம் ''இனி நாம் கடலைக் கடக்க வேண்டியதுதான். வேறு நிலப்பரப்பு ஒன்றும் இல்லை. நாம் யாவரும் இங்கேயே தங்கி அதற்கான வேலையைச் செய்வோம். யாரும் இங்கு இருந்து வெகு தூரம் போகவேண்டாம். ஒரு வேளை எதிரிகளுக்கு நம் நடமாட்டம் தெரிந்து நம்மைத் தாக்க வந்தால் அவர்களை எதிர்க்க எப்போதும் தயாராகவே இருக்க வேண்டும்'' என்றார்.

சுக்ரீவன் அந்த வானர சேனையை மூன்று பகுதிகளாகப் பிரித்தான். யாவரும் கோசமிட்டுக்கொண்டு நின்றனர். கடலின் கொந்தளிப்பால் ஏற்பட்ட சத்தம் கூட வானரங்கள் போட்ட கூச்சலில் யாருக்கும் கேட்காமல் போயிற்று. யாவரும் அந்த மாபெரும் கடலைப் பார்த்து நின்றனர். அதனை எப்படிக் கடப்பது என்ற மலைப்பு தோன்றியது.

நீலன் முறைப்படி சேனைத் தலைவன் ஆனான். சேனையின் பக்க பலத் தலைவர்களாக மைந்தனும், துவிவீதனும் பொறுப்பேற்றனர்.



இவ்வாறு பல விதமான சேனையின் அமைப்பை ஏற்படுத்தியாகி விட்டன.

இராமர் ஓரிடத்தில் அமர்ந்து சீதையைப் பற்றிய நினைத்துக் கொண்டு இருந்தார். இலட்சுமணனும் அவரருகே இருந்து அவர் துயரப் பட்டுக் கூறும் வேதனை நிறைந்த மொழிகளை கேட்டுக் கொண்டிருந்தார். மெது மெதுவாக பொழுதும் போய் மாலையாகி விட்டது.

இலட்சுமணன் இராமருக்கு ஆறுதல் மொழிகளைக் கூறித் தேற்றினார். அதன் பின்னர் இராமரும் மாலையில் செய்யும் சந்தியாவந்தனத்தைச் செய்தார். அதன் பிறகு யாவரும் தத்தம் வேலைகளில் மூழ்கினர்.

இதே சமயம் இலங்கையில் இராவணன் மிகவும் கோபம் கொண்டு அரக்கர்களிடம் வார்த்தைகளை நெருப்புப் பொறி தெறிப்பது போல அள்ளி விட்டுக் கொண்டு இருந்தான். ''இலங்கைக் கோட்டைக்குள் இதுநாள் வரை யாருமே நுழைய முடியாது என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால், ஒரு குரங்கு உள்ளே புகுந்து வந்து பெரிய பெரிய அரக்கர்களை அழித்ததோடு அல்லாமல் நகருக்கே தீ மூட்டி நாசப்படுத்தி விட்டது. இது எவ்வளவு பெரிய அவமானம். அது மட்டுமா? கட்டுகாவலோடு சிறைப் படுத்தப்பட்ட சீதையைக் கண்டு அது அவளோடு பேசிவிட்டுப் போய் இருக்கிறது. இதை எல்லாம் பார்த்துக்



கொண்டு நாம் பேசாமல் இருந்து இருக்கிறோம். இப்போதோ அந்த இராமர் பல்லாயிரம் வானரங்களோடு இலங்கை மீது படை எடுத்துக் கொண்டு வந்து கொண்டு இருக்கிறானாம். சுக்ரீவனின் துணையோடும் இலட்சுமணனின் துணையோடும் உள்ள அவன் எப்படியும் கடலைக் கடந்தே விடுவான். இதில் சந்தேகமே இல்லை. கடலை வற்றச் செய்தோ அல்லது வேறு எந்த உபாயத்தாலோ கடலைக் கடந்து இலங்கை மீது படை எடுத்து வந்தால் அந்தப் படை எடுப்பை நாம் எப்படி எதிர்ப்பது? என்ன செய்வது என்று நீங்கள் கூறுங்கள்'' என்றான்.

அதுகேட்டு மற்ற அரக்கர்கள் ''அரக்கர்களின் மாபெரும் மன்னரே! உங்களுக்கு திடீரென ஏன் சந்தேகம்

வந்து விட்டது? நமக்கு பலமில்லையா? தைரியம் இல்லையா? ஆட்கள் இல்லையா? நம் சக்திதான் எவ்வளவு? பலவிதமான ஆயுதங்கள், மந்திர தந்திரங்கள் தெரிந்துள்ள அரக்கர்கள் இருக்க நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? உங்களது சக்திதான் மூவுலகிற்கும் தெரிந்த தாயிற்றே. உங்களை யாரால் என்ன செய்ய முடியும்? குபேரனையே வென்று அவனது புஷ்பக விமானத்தை நீங்கள் கொண்டு வரவில்லையா? மயனே உங்களுக்குத் தன் மகளான மண்டோதரியை விவாகம் செய்து கொடுத்து அடங்கிவிடவில்லையா?

''வாசுகி, தட்சகன் போன்ற சர்ப்ப மன்னர்கள் உங்களுக்கு அடங்கிக் கிடக்கிறார்களே. மாயா சக்தியில் கை தேர்ந்தவர்களான காலகேயர்கள் உங்களோடு போரிட்டு முடிவில் தோற்றுப் போகவில்லையா? வருணன், எமன் போன்ற தேவர்கள் உங்களுக்கு அடங்கிவிடவில்லையா? இவர்களை எல்லாம்விட அந்த இராமன் சக்தி வாய்ந்தவனா? பெரிய பெரிய வீரர்களை அடக்கிய உங்களுக்கு இந்த இராமன் கொசுவுக்குச் சமமானவன். மேலும் உங்கள் மகன் இந்திரஜித்து இருக்கிறானே. பல வரங்களைப் பெற்ற அவன் இந்திரனையே வென்றவன். இப்படிப்பட்டவனால் இராமரையே ஒரு கட்டுக்கட்டி நிமிடத்தில் சிறைப் பிடித்து விட முடியும். எனவே நீங்கள் சற்றும் கவலைப்படாதீர்கள். அந்த வானரமான அனுமான் செய்த சேஷ்டைகளைப் பற்றி நினைத்து கவலைப்பட்டுக் கொண்டிருக்காதீர்கள்'' எனக் கூறினார்கள்.

இது போலவே பிரகஸ்தனும், துன்முகனும், வச்சிரதம்ஷ்ட்ரனும் கும்பகர்ணனின் மகன் நிகும்பனும் வீராவேச மொழிகளைக் கூறினர். வச்சிரகன் என்பவனோ எல்லா வானரங்களையும் விழுங்கி விட்டு வரமுடியுமெனக் கூறினான். இப்படி எல்லாம் ஒவ்வொருவரும் தம் வீரப்பிரதாபங்களை எல்லாம் எடுத்துக் கூறி வானரப்படைகளின் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கூறலாயினர். இராவணனும் அவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டே இருந்தான். **(தொடரும்)**





# புதையலைத் தேடி

தீனன் குதிரை வண்டி ஓட்டிப் பிழைப்பு நடத்தி வந்தான். ஒரு நாள் மாலையில் அவன் வீடு திரும்புகையில், ஒரு மனிதன் அவனை நிறுத்தி தனக்கு இரவு நேரத்தில் கிராமத்தில் இருந்து ஆறு மைல் தொலைவிலிருந்த ஒரு சத்திரத்திற்குச் செல்ல வேண்டும் என்றும், குதிரை வண்டியில் தன்னை அழைத்துச் சென்று தன்னுடன் தங்கி திரும்ப அழைத்து வர வேண்டும் என்றும் கூற, தீனன் சம்மதித்தான்.

இரவு ஆனதும், அந்த ஆள் ஒரு பெரிய குடம், கடப்பாறை மண்வெட்டிகளுடன் தீனனை வந்து அடைய, தீனனும் அவனையும், அவன் கொண்டு வந்த பொருட்களையும் வண்டியில் ஏற்றி வண்டியை ஓட்டிச் சென்றான். சில மணி நேரங்களில் அவர்கள் அந்தப் பழைய சத்திரத்தை அடைந்தனர். வண்டியில் இருந்த பொருட்களை இறக்கும்போது, குடம் தவறி கீழே விழ அதனுள் இருந்த சில நாணயங்கள் சிதறின. தனது ஆர்வத்தைக் கட்டுப்படுத்தி வைத்திருந்த தீனன் அதற்குமேல் பொறுக்காமல் அந்த ஆளைப் பார்த்து, ''இந்த நடு இரவில் நீங்கள் ஏன் இங்கு வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''என் பெயர் மாணிக்கம்! என்னுடைய தாத்தா கடல் கடந்து சென்று வியாபாரம் செய்து ஏராளமாகப் பணம் சம்பாதித்தார். ஒரு முறை அவர் வெளிநாட்டில் இருந்து பணத்துடன் தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டு இருந்தபோது, இந்த சத்திரத்தில் தங்கினார். நடு இரவில் இங்கு சில கொள்ளைக்காரர்கள் நுழைந்து சத்திரத்தில் இருந்தவர்களைக் கொன்றுவிட்டு அவர்கள்

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை

உடைய உடைமைகளைத் திருடிக் கொண்டு ஓடிவிட்டனர். அவ்வாறு கொல்லப்பட்டவர்களில் என் தாத்தாவும் ஒருவர்!

அதனால் மனமுடைந்து போன என் தகப்பனார் அதற்குப்பின் நீண்ட நாள்கள் உயிர் வாழவில்லை. அவர் எனக்கு விட்டுச் சென்றது ஒரு வீடு மட்டுமே! அந்த வீட்டை விற்று விடலாம் என்று எண்ணிய நான் அங்கிருந்த பொருட்களை அகற்றிய போது, பரணில் என் தாத்தாவின் குறிப்பேடு ஒன்று கிடைத்தது. அதில் என் தாத்தாவின் கடைசிப் பக்கத்தில் ''இப்போது எல்லாம் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் அதிகரித்து விட்டனர். அதனால் வெளிநாடு சென்று திரும்பாவிட்டால் எனக்கு ஏதோ அசம்பாவிதம் நடந்து விட்டது என்று புரிந்து கொள்ளுங்கள். என்னிடம் உள்ள பணத்தை ஒரு சிறிய பெட்டியில் வைத்து சத்திரத்தின் பின் புறம் உள்ள தோட்டத்தில் புதைத்து வைத்திருக்கிறேன்'' என்று எழுதி இருந்தார்.

மேற்கூறிய நிகழ்ச்சியைக் கூறிய பின் மாணிக்கம் தீனனைப் பார்த்து, ''இந்தப் புதையல் எங்கே உள்ளது என்பதை ஆங்காங்கேத் தோண்டிப் பார்த்தால்தான் தெரியும். நீ மட்டும் குழி தோண்ட எனக்கு உதவி செய்தால், கிடைக்கும் புதையலில் மூன்றில் ஒரு பங்கை உனக்குத் தருவேன்'' என்று சொல்ல, தீனன் உற்சாகத்துடன் சம்மதித்தான்.

தீனன் மாணிக்கத்துடன் உற்சாக மாகக் குழி தோண்ட ஆரம்பித்தான். விடியும் வரை ஓரிரு இடங்களில் தோண்டியும் ஒன்றும் கிடைக்க வில்லை. மறுநாள் இரவு வரலாம் என்று எண்ணிக் கொண்டு அவர்கள் வீடு திரும்பினர். மறுநாள் இரவும்



அவர்களுடைய முயற்சியில் பலன் இல்லை. சோர்ந்து போய் திரும்பிய தீனனை நோக்கி அவனுடைய மனைவி காமாட்சி ''இரண்டு நாளாக இரவில் எங்கே செல்கிறாய்?'' என்று கேட்டாள். எல்லாவற்றையும் அவளுக்கு விளக்கிய தீனன், கடைசியில், ''காமாட்சி! இன்று மாலை நான் மட்டும் தனியாக அந்த இடத்திற்குப் போய் தோண்டிப் பார்க்கப் போகிறேன். ஒரு வேளை புதையல் கிடைத்தால், அதை முழுவதும் நானே எடுத்துக்கொள்வேன்'' என்றான்.

''சீச்சீ! உன் புத்தி ஏன் இப்படிப் போகிறது? அவருக்குத் தெரியாமல் அவருடைய புதையலைத் திருட வேண்டுமா? அந்தப் பணம் நமக்குத் தேவையில்லை!'' என்றாள்.

ஆனால், தீனன் பிடிவாதமாக அவள் சொல்வதைக் கேட்க மறுத்து விட்டான். மாலையில் அவன் மட்டும் தனியாகச் சென்று ஓரிரு இடங்களைத் தோண்டினான். இருட்டும் வரை தோண்டியும் ஒன்றும் கிடைக்காததால், தோண்டிய குழிகளை மூடிவிட்டு வீடு திரும்பினான். பிறகு இரவில் மாணிக்கத்துடன் சேர்ந்து சென்று இரவிலும் தோண்டினான்.

இவ்வாறு இரண்டு வாரங்கள் கழிந்தன. மாணிக்கத்தை விட மிகத் தீவரமாகவும், ஆர்வத்துடனும் தீனன் வேலை செய்தான். குதிரை வண்டியும் ஓட்டிக் கொண்டு பணம் சம்பாதிப்பதுடன் மாலை இரவு நேரங்களில் நாயாய் உழைத்ததனால் தீனன் நோய் வாய்ப்பட்டுப் படுக்கையில் வீழ்ந்தான்.



தனது பக்கத்து வீட்டுக்காரனை மாணிக்கத்திடம் அனுப்பி அன்றிரவு தன்னால் வரமுடியாது என்று தகவல் அளித்தான். ஆனால், அந்த ஆள் திரும்பி வந்து மாணிக்கம் வீடு பூட்டியிருக்கிறது என்றும், அவன் ஊரை விட்டுச் சென்றதாக தகவல் கிடைத்ததாகவும் கூறியதைக் கேட்டு, தீனனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

உடனே தனக்குக் காய்ச்சல் அடிப்பதையும் பொருட்படுத்தாமல் மாணிக்கத்தின் வீட்டிற்கு ஓடினான். அவன் கேள்விப்பட்டது உண்மைதான்! மாணிக்கத்தின் வீட்டில் பூட்டு தொங்கியது. பக்கத்து வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து இருந்த கிழவனை விசாரித்தபோது அவன் ''மாணிக்கத்திற்கு பைத்தியம் முற்றி விட்டதால் சிகிச்சைக்காக நகரத்திற்கு கூட்டிச் சென்றுள்ளனர்'' என்றான்.

''என்ன? மாணிக்கத்திற்குப் பைத்தியமா?'' என்று தீனன் ஆச்சரியத்துடன் கூவினான்.

''அவனுக்கு என்றைக்கோ பைத்தியம் பிடித்து விட்டது! தன் தாத்தா புதையலை ஒளித்து வைத்து இருக்கிறார் என்ற ரகசியத்தை அறிந்து கொண்ட நாள் முதல் அவன் பைத்திய மாகி விட்டான். தான் செய்து வந்த வியாபாரத்தை நிறுத்தி விட்டான். கையில் ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு புதையல் எடுத்து வரப் போவதாகக் கூறிப் பல ஆட்களை ஆசைகாட்டி அலைக்கழித்து இருக்கிறான். நீயும் அவர்களில் ஒருவன் போலிருக்கிறது!'' என்றார்.

அதைக் கேட்டு தீனன் இடிந்து போனான். ஒரு பைத்தியத்தின் வார்த்தைகளை நம்பி புதையல் இருப்பதாக எண்ணிக் கொண்டு இரவு பகலாய் உழைத்தேனே என்று வருந்தினான். சரி, இனியாவது நம் வேலையைப் பார்ப்போம் என்று வீடு திரும்பினான்.

அவன் தலை மறைந்தவுடன், மறைவிடத்திலிருந்து வெளிவந்த தீனனின் மனைவி காமாட்சி அந்தக் கிழவனை அணுகி, ''உங்களைப் பொய் சொல்ல வைத்ததற்காக என்னை மன்னித்து விடுங்கள்,'' என்றாள்.

''நீ சொன்னபடியே செய்து விட்டேன். உண்மையில் மாணிக்க த்திற்கு புதையல் கிடைத்து விட்டது. அவன் இந்த ஊரை விட்டு போய் விட்டான். ஆனால், அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாக என்னை ஏன் பொய் சொல்ல சொன்னாய்?'' என்றார்.

அதற்கு காமாட்சி, புதையலை பற்றிய பேராசையில் இரவு, பகல் உழைத்து உடலைக் கெடுத்துக் கொண்டார். இப்படியே போனால் அவர் நோய் வாய்ப்பட்டுப் படுக் கையில் விழுந்து பைத்தியமாக மாறி விடுவார். அதன்பின், நானும் என் குழந்தைகளும் பட்டினி கிடக்க வேண்டியதுதான்! அதனால் தான் உங்களைபொய் சொல்லச்சொன்னேன், நன்றி!'' என்று கூறிய காமாட்சி வேறு பாதை வழியாக தன் வீடு திரும்பினாள்.





# நண்பன்

ஒரு நாள் ரமேஷும், காமேஷும் ஆற்றங்கரையில் நடந்து கொண்டு இருக்கையில், ஒரு பொம்மை வியாபாரி அவர்கள் எதிரில் வந்தான். அவர்களிடம் இரண்டு பொம்மைகளைக் காட்டியபடியே, ''ஐயாமார்களே! என்னிடம் இந்த இரண்டு பொம்மைகளைத் தவிர மற்ற பொம்மைகள் விற்று விட்டன. இதுவரை ஒரு பொம்மை பதினைந்து ரூபாய்க்கு விற்றேன். உங்களுக்காக என்னிடமுள்ள இந்தக் கடைசி பொம்மைகள் இரண்டையும் பத்து ரூபாய்கேத் தருகிறேன்'' என்றான்.

ரமேஷிடம் பணம் இல்லை. காமேஷிடம் பணம் இருந்த போதிலும் இரண்டு பொம்மைகள் வாங்க இஷ்டம் இல்லை. ''ஏன் தயங்குகிறாய் காமேஷ்? இரண்டையும் நீயே வாங்கிக்கொள்! ஒன்றை நீ வைத்துக் கொண்டு, மற்றதை உன் நண்பன் யாருக்காவது கொடுத்து விடு!'' என்றான் ரமேஷ்.

''என் நண்பன் நீதான் இருக்கிறாயே! அதனால் ஒன்றை உனக்கேக் கொடுக்கிறேன்!'' என்றான் காமேஷ். பிறகு இரு பொம்மைகளையும் வாங்கிக் கொண்டான். பிறகு இருவரும் வீடு திரும்பினர்.

''காமேஷ்! நான் பணம் எடுத்து வருகிறேன். அதன் பிறகு உனக்குப் பணம் கொடுத்து விட்டு ஒரு பொம்மையை வாங்கிக் கொள்கிறேன்'' என்றான் ரமேஷ்.

''நண்பனான உன்னிடம் பணம் வாங்குவேனா?'' என்றான் காமேஷ்.

''யாரிடமும் இலவசமாக வாங்கிக் கொள்வதில் எனக்கு விருப்பம் இல்லை'' என்று கூறிவிட்டு ரமேஷ் வீட்டுக்குள் சென்று விட்டான். பிறகு காமேஷ் இரு பொம்மைகளையும் எடுத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்

காயத்ரி சங்கரன்



தான். தன் மனைவியிடம் நடந்த வற்றைக் கூறினான். அதற்கு அவன் மனைவி, ''ஒருக்கால் இலவசமாக எதையும் பெற்றுக் கொள்ளக்கூடாது என்பது அவருடைய கொள்கையா இருக்கும்'' தொடர்ந்து, ''நான்கைந்து நாள்களுக்குப்பின் நான் அவர்கள் வீட்டுக்குச் சென்று அவருடைய மனைவியிடம் ஒரு பொம்மையைத் தந்து விடுகிறேன்'' என்றாள்.

அதே போல் சில தினங்களுக்குப் பிறகு அவள் ஒரு பொம்மையை இலவசமாக ரமேஷின் மனைவி யிடம் கொடுத்து விட்டாள்.

ஒரு நாள் காமேஷ் கிராமத்து அதிகாரியின் வீட்டுக்குச் சென்ற போது, அவர் ஒரு கம்பள வியாபாரி யிடம் பேரம் பேசிக் கொண்டு இருந்தார். இடையில் குறுக்கிட்ட காமேஷ், ''ஐயா! உங்கள் வீட்டு வரவேற்பறையில் உள்ள கம்பளம் புதிதாகத்தானே இருக்கிறது! நீங்கள் எதற்கு இன்னொரு கம்பளம் வாங்கு கிறீர்கள்?'' என்றான்.

''எல்லாம் உன் நண்பன் ரமேஷுக் காகத்தான்! அவன் எங்களிடமுள்ள பழைய கம்பளத்தைத் தனக்குத் தர முடியுமா என்று கேட்டான். நானும் சம்மதித்தேன். அதனால்தான் புதிதாக ஒன்று வாங்கப் போகிறேன்'' என்றார்.

''என்ன? ரமேஷ் பழைய கம்பள த்தை விரும்பிக் கேட்டான்?'' என்று காமேஷ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

''என்னிடமிருந்து மட்டுமல்ல! மற்றவர்களிடம் இருந்தும் பழைய பொருட்களை இலவசமாகப் பெற்றுக் கொள்கிறான்'' என்றார் அவர்.

அதைக் கேட்டதும் ரமேஷ் மீது அவனுக்கு கோபம் வந்தது. காமேஷ் உடனே தன் மனைவியை அழைத்துக் கொண்டு ரமேஷ் வீட்டுக்குச் சென்றான். அவனிடம் தான் கேள்விப்பட்ட விஷயத்தைக் கூறி விளக்கம் கேட்டான்.

''இதற்கா இத்தனை ஆர்ப்பாட்டம் செய்கிறாய்? நான் பழைய பொருட் களை பிறரிடம் இருந்து இலவச மாகப் பெற்றுக் கொள்வது உண்மை தான்! ஆனால், அவ்வற்றை நான் வைத்துக் கொள்வதில்லை பிறருக்கு தானம் செய்து விடுகிறேன்'' என்றான் ரமேஷ்.

''நீ பெரிய வள்ளல் என்ற நினைப் போ? அவரவர்கள் தங்களுக்கு வேண்டியதைத் தங்கள் நண்பர்களிடம் கேட்டு வாங்கிக் கொள்ளலாமே! நீ

எதற்கு நடுவில்?'' என்று கேட்டான் காமேஷ்.

அதற்கு ரமேஷ் ''நான் சொல்வதை கவனமாகக் கேள்'' என்று தன் செயலுக்கு விளக்கம் கூறினான்.

ஒரு முறை கிராமதிகாரியின் வீட்டுக்குச் சென்றிருந்தபோது அவருடைய ஏழை நண்பர் ஒருவர் கிராம அதிகாரியின் வீட்டுக் கம்பளத்தைக் கண்டு ''ஆகா! இது மிகவும் நன்றாக இருக்கிறது. எனக்கும் இதுபோல் ஒன்றிருந்தால் நன்றாக இருக்கும்'' என்றார். அவருக்கு அதை இலவசமாகக் கொடுத்துவிட கிராமதிகாரி எண்ணினார். ஆனால், தானே அதை அளித்தால் தன் நண்பரின் மனம் புண்படுமோ என்று சும்மாயிருந்து விட்டார். அதனால் ரமேஷ் அதை கிராமதிகாரியிடம் இருந்து பெற்றுக் கொண்டு அதையே அவர் நண்பருக்குக் கொடுத்துவிடத் திட்டமிட்டான்.

''இதுதான் விஷயம்!'' என்று விளக்கிய ரமேஷ் ''பலர் தங்கள் நண்பர்களிடம் கேட்டு வாங்கக் கூச்சப்படுவார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு என்னிடமுள்ள பழைய பொருட்களை நான் இலவசமாக அளிக்கிறேன்'' என்றான்

''அப்படியானால் சில தினங்களுக்குப் பிறகு என் மனைவி அதே பொம்மையைக் கொடுத்தபோது ஏன் வாங்கிக் கொண்டாய்?'' என்று காமேஷ் மடக்கினான்.

''உன்னிடம் சில நாள்கள் அந்த பொம்மை இருந்ததால் அது பழைய பொருளாகிவிட்டது. பழைய பொருட்களை வாங்கிக் கொள்ள நான் மறுத்தது இல்லை. என் நண்பனிடம் இருந்து தானே பழைய பொருள் கிடைக்கிறது என்று வாங்கிக் கொண்டு விட்டேன். இப்போது கூட ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நீ என் நண்பன் இல்லை என்று ஒரு வார்த்தையில் சொல்லிவிடு! அதை இப்போதே உன்னிடம் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்'' என்று பதிலடி கொடுத்தான் ரமேஷ்.

இவ்வாறு ரமேஷை அவமானப் படுத்த நினைத்த காமேஷ் மீண்டும் மூக்கு உடைபட்டான்.



# உண்மையான குருடன்

லட்சுமிபுரத்து ஜமீன்தாரான ஜெகபதிக்கு மற்றவர்களைச் சீண்டுவது, கேலி செய்வது, துன்புறுத்துவது ஆகிய காரியங்கள் மிகவும் பிடிக்கும். ஒருநாள் அவர் தன் சேவகனுடன் கோயிலுக்குச் சென்றார். சுவாமி தரிசனம் முடிந்தபின் வெளியே வந்தபோது, கோயில் வாயிலில் ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் ''அய்யா அம்மா! பிச்சை போடுங்க! கண்ணில்லாதவன் தாயி!'' என்று பிச்சை கேட்டுக் கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்தவுடன், ஜெகபதிக்கு அவனை சீண்ட வேண்டுமெனத் தோன்ற, ஒரு கூழாங்கல்லையெடுத்து அவன் பிச்சைப் பாத்திரத்தில் போட்டார். உடனே பிச்சைக்காரன், ''என் பாத்திரத்தில் கூழாங்கல்லைப் போட்டது யார்? நான் ஒரு குருடன்! ஆனால், கண்ணிருப்பவர்கள் இப்படி நடந்து கொள்ளலாமா? உண்மையில் நீங்கள்தான் குருடன்!'' என்று ஏசினான்.

அதைக் கேட்டு கோபங்கொண்ட உடன் வந்த சேவகன், ''டேய்? யாரைப் பார்த்து குருடன் என்கிறாய்? இவர் ஜமீன்தார் ஜெகபதி! நினைவிருக்கட்டும்'' என்று கூச்சலிட்டான். அதற்கு பிச்சைக்காரன், ''பாத்திரத்தில் விழுந்த பொருளின் ஒலியைக் கேட்டுத்தான் அதை நான் கல் என்று கண்டுபிடித்தேன். ஆனால், ஒரு பெரிய ஜமீன்தார் இத்தகைய காரியத்தை செய்தார் என்று அறியும்போது எனக்கு வியப்புடன் வேதனையும் உண்டாகிறது'' என்றான்.

அதைக் கேட்ட ஜமீன்தார் அவமானத்தினால் தலை குனிந்தார். அன்று முதல் மற்றவர்களை சீண்டிப்பார்க்கும் வழக்கத்தை விட்டுவிட்டார்.

- அமுதா



# அம்புலிமாமா புதிர்ப்போட்டி-12

(16 வயதிற்குட்பட்ட சிறுவர்களுக்கு)

Co-sponsored by
Infosys FOUNDATION, Bangalore

**சரியான விடைகள் அளிக்கும் வாசகருக்கு ரூ 250 பரிசு★ கிடைக்கும்.**

**இந்த இதழில் தோன்றும் கேள்விகள் கடந்த 2008ஆம் ஆண்டில் நிகழ்ந்த சாதனைகளைப் பற்றியவை**

*★ஒருவருக்கும் மேற்பட்டவர்கள் சரியான விடை அளித்திருந்தால், அனைவருக்கும் 50 ரூபாய் பரிசாக வழங்கப்படும்.*

நீங்கள் செய்ய வேண்டியவை: 1. விடைகளை எழுதுங்கள், 2. உங்களுடைய பெயர், வயது மற்றும் பின்கோடுடன் கூடிய முழு முகவரியைக் குறிப்பிடுங்கள், 3. சந்தாதாரர் எனில், அந்த எண்ணைக் குறிப்பிடவும், 4. உறையில் அம்புலிமாமா புதிர்ப்போட்டி-12 என்று குறிப்பிட்டு, அம்புலிமாமாவின் முகவரிக்கு அனுப்புங்கள், 5. ஜனவரி மாத இறுதிக்குள் உங்கள் விடைகள் எங்களை வந்து அடைய வேண்டும், 6. மார்ச்'09 இதழில் முடிவு வெளியாகும்.



1. சமீபத்தில் இந்தியாவில் எந்த மாநகரில் புதிதாக விமான நிலையம் உருவாக்கப்பட்டது?
2. அக்டோபர் 12ஆம் தேதி நடந்த விழாவில் செயின்ட் அல்ஃபோன்சா ஒரு தெய்வப் பிறவியாக அறிவிக்கப்பட்டார். அவர் கேரள மாநிலத்தில் எந்த ஊரில் பிறந்தவர்?
3. நான்காவது காமன்வெல்த் யூத் கேம்சில், இந்தியா பெற்ற பதக்கங்கள் எத்தனை? அவற்றுள் தங்கப் பதக்கங்கள் எத்தனை?
4. சென்ற ஆண்டுக்கான ராமன் மேகசே விருதைப் பெற்ற இந்திய தம்பதி யார்?
5. முதன் முதலாக ஒலிம்பிக் போட்டியில் தனிப்பட்ட நபருக்கான போட்டியில் தங்கப் பதக்கம் வென்ற இந்தியர் யார்? எந்தப் போட்டியில் அவர் பதக்கம் பெற்றார்?
6. இந்திய இராணுவத்தின் முதல் ஃபீல்டு மார்ஷல் சமீபத்தில் இறந்து போனார். அவர் யார்?

PANGAA GANG

**'டிஃபாரடேஷன்' என்ற ஆங்கிலச் சொல்லின் பொருளென்ன?**

மரங்களை வெட்டி காடுகளை அழிப்பது என்று பொருள்.

**காடுகளை ஏன் அழிக்கின்றோம்?**

பெருகி வரும் மக்கள் தொகையில் தேவைக்கேற்ப குடியிருப்பு வசதிகளும், தொழிற்சாலைகளும் ஏற்படுத்துவதற்காக காடுகள் அழிக்கப்படுகின்றன.

**வேறு ஏதாவது காரணங்கள் உண்டா?**

வேறு பல காரணங்களும் உண்டு. அவற்றில் முக்கியமானவை:

- காகிதம் போன்ற பொருட்கள் தயாரிக்க...
- நிலத்தைத் தோண்டி, நிலக்கரி, பெட்ரோலியம், உலோகங்கள் எடுக்க...
- உள்நாட்டுக் கலகங்கள், பருவமழை தொடர்ந்து தவறுதல் ஆகியவை.

**உலகிலுள்ள அடர்ந்த காடுகள் யாவை?**

- தென்னமெரிக்காவில் உள்ள அமேசான் சதுப்பு நிலக் காடுகள்
- மத்திய ஆப்பிரிக்காவில் உள்ள காங்கோ சதுப்பு நிலக் காடுகள்
- தென் கிழக்கு ஆசியக்காடுகள்
- நியூ கயானா காடுகள்
- மடகாஸ்கர் காடுகள்

**நினைவிருக்கட்டும்**

- காடுகள் அழிந்தால், அவற்றுடன் அங்கு வாழும் ஜீவராசிகளும் மடியும்.
- தற்போது, நாளொன்றுக்கு 137 விதமான ஜீவராசிகள் முற்றிலுமாக அழிந்து வருகின்றன. அதாவது ஆண்டுக்கு 50,000 ஜீவராசிகள்!

**காடுகளை அழிப்பதால் உண்டாகும் தீங்குகள் யாவை?**

- செடி, கொடிகள், பூச்சிகள் மற்றும் வனவிலங்குகளும் மடியும்
- வனவிலங்குகள் இருக்க இடமின்றி தவிக்கின்றன
- மரங்களும், தாவரங்களும் இல்லாவிட்டால், நில அரிப்பு (EROSION) ஏற்படுகிறது. நிலத்திலுள்ள சத்துகள் மழைத் தண்ணீரில் அடித்துச் செல்லப்படுகின்றன.
- வெள்ளம் ஊருக்குள் புகுந்து விடுகிறது.
- மிக அதிக வெப்பமும், குளிர்ச்சியுமான தட்பவெப்ப நிலை உண்டாகிறது.
- தாவரங்கள் கார்பன் டை ஆக்சைடை சுவாசித்து ஆக்சிஜனை வெளிவிடுகின்றன. காடுகள் அழிவதால், காற்றில் கரியமில வாயு மிகுந்து மாசுபடுகிறது.
- நிலம், நீர், காற்று அனைத்தும் மாசு படுகின்றன.

**காடுகளை அழிப்பதைத் தடுக்க என்ன செய்யலாம்?**



**www.pangaagang.com என்ற இணையதளத்தை லாக் ஆன் செய்து காடுகளை அழிப்பதைத் தடுக்கும் முயற்சியில் பாங்கா கேங்குடன் இணைந்து செயற்படுங்கள்!**

# உங்கள் பக்கம்

## உங்கள் சுற்றுப்புறம்

### கடற்பஞ்சு



'ஸ்பாஞ்ச்' எனப்படும் கடற்பஞ்சை பல நூறு ஆண்டுகளாக, பல நாடுகளில் மனிதர்கள் குளிக்கும் போது உடலைத்தேய்த்துக் கொள்ளப் பயன்படுத்தி வருகின்றனர். கடற்பஞ்சு என்பது கடலில் விளையும் ஒரு தாவரம் என்றே பலரும் கருதுகின்றனர். ஆனால், ஒரு காலக்கட்டத்தில் விஞ்ஞானிகள் இது செடியல்ல என்றும், உயிருள்ள கடல்வாழ் ஜீவராசிகள் என்றும் கண்டு பிடித்தனர். இது மற்ற உயிரினங்களைப் போல் உணவு உண்கிறது, காற்றையும் சுவாசிக்கிறது. கடற்பஞ்சை இரு பாதியாக வெட்டினால், ஒவ்வொன்றும் மீண்டும் வளரத் தொடங்கும்.

கடற்பஞ்சுகளில் பலவிதங்கள் உண்டு. சில மென்மையாகவும், சில கடினமாகவும் உள்ளன. இவை வெவ்வேறு வடிவங்களில், வெவ்வேறு நிறங்களில் கடலில் வளருகின்றன.



## உங்கள் விஞ்ஞானம்

### திசை காட்டி

இரவு நேரங்களில் விமானங்கள், கப்பல்கள் ஆகியவை எவ்வாறு சரியான திசையைக் கண்டு பிடிக்கின்றன என்று தெரியுமா? திசைக்காட்ட அவை 'மாக்னடிக் காம்பஸ்'சை பயன்படுத்துகின்றன. இதை நீங்களே தயாரிக்கலாம். 3 செ.மீ நீளமான ஓர் ஊசி, ஒரு காந்தம், ஒரு தக்கை (conk) ஆகியவை இருந்தால் போதும். தக்கையிலிருந்து ஒரு மெலிதான வில்லையை அறுத்து எடுத்துக் கொள்ளுங்கள். அதன் மையம் வழியாக ஊசியை செலுத்துங்கள். இப்போது வில்லை நடுவிலிருக்க, இருபுறமும் ஊசி நீட்டிக்கொண்டிருக்கும்.

காந்தத்தின் வடதுருவத்தை (North Pole) ஊசியின் ஒரு முனையருகில் காட்டுங்கள் (காந்தத்தின் வடதுருவம் ஒரு வெண்மையான புள்ளியினால் குறிப்பிடப்பட்டிருக்கும்). காந்தம் அருகில் வந்தவுடன், ஊசியும் காந்தமாகி விடும். எந்த முனையின் அருகில் காந்தத்தின் வடதுருவத்தைக் கொண்டு செல்கிறோமோ, அது வடதுருவமாகி விடும். அதை 'N' என்று ஊசியில் குறிப்பிடுங்கள்.

பிறகு, ஊசியைத் தக்கையுடன் ஒரு கோப்பையிலுள்ள நீரில் மிதக்க விடுங்கள். ஊசியின் 'N' முனை வடக்கு திசையைக் காட்டும். எதிர்முனை தெற்கைக் காட்டும். அதிலிருந்து மற்ற திசைகளை கண்டு பிடித்துக் கொள்ளலாம்.

AMBULIMAMA (Tamil) January 2009 Registrar of Newspapers of India No. 1095/57. Regd No. TN/CC(S)Dn/161/06-08
Licensed to post WPP - Inland No.TN/CC(S)Dn/88/06-08, Foreign No. 89/06-08



# புப்பாவின் சாகசம்




























